# கல்கி

KALKI
5.1.86
ரூ 1.50



PROGRESS REPORT:

## முதலாண்டின் முடிவில்...

☐ GOOD ☐ BAD ☐ FAIR ☐ VERY GOOD ☐ EXCELLENT

# மாதம் ஒரு மாவட்டம்

## கல்கி ஏற்கும் சமுதாயப் பணி




**உங்களுக்கு நாங்கள் உதவ, உங்கள் ஒத்துழைப்பை எங்களுக்கு அளிக்க வேண்டுகிறோம்!**

உங்கள் ஊரில் தீர்க்கப்படாத பல பொதுப் பிரச்னைகள் நிச்சயம் இருக்கும்; அத்துடன் தனி நபர்களுக்கும் சில தர்ம நியாயமான குறைகள் இருக்கவே செய்யும். எத்தனையோ மனுக்கள் எழுதியும் அதிகாரிகள், எம்.எல்.ஏ.க்களிடம் முறையிட்டும் தனிநபருக்குநீதிகிடைக்கவில்லையே என்றோ, பொதுப் பிரச்னை தீரவில்லையே என்றோ மனம் குமுறிக் கொண்டிருப்பீர்கள். இதற்கு மறுபுறமாக உங்கள் மாவட்டத்தின் ஒரு சிறப்பியல்பு: அங்கு நிகழ்ந்துள்ள ஒரு சாதனை அல்லது ஒரு தனி மனிதரின் வெற்றிக் கதை போற்றப்படவில்லையே என்ற ஏக்கமும் உங்களுக்கு இருக்கலாம். இந்த அம்சங்களைக் குறித்து நன்கு சிந்தித்துச் சுருக்கமாக எங்களுக்குக் கடிதம் எழுதுங்கள். எல்லாவற்றையும் பிரசுரிப்போம் என்றோ, அல்லது அனைத்துப் பிரச்னைகளுக்கும் தீர்வு காண்போம் என்றோ உறுதி கூற முடியாதென்றாலும் குறிப்பிட்ட சில பிரச்னைகளையேனும் வெளிச்சத்துக்குக்கொண்டுவருவதின்மூலம் அரசாங்கத்தின் கவனத்தைமற்றபலபிரச்னைகள் பக்கமும் ஈர்க்க முயல்கிறோம். அதே போல் வாசகர்களின் பாராட்டுக்களைப் பெறத் தகுதியுடைய குறிப்பிட்ட சில சாதனைகளையேனும் படம் பிடித்துக் காட்டுகிறோம். ஒரு சமுதாய சேவையாகக் கருதி, "மாதம் ஒரு மாவட்டம்" என்ற இப்பகுதியைத் தொடங்குகிறோம்.

**இந்தத் திட்டத்தின் கீழ் முதலில் மதுரை மாவட்டம்தேர்ந்தெடுக்கப்படுகிறது.**

மதுரை மாவட்டத்தில் உள்ளவர்கள் அவரவர் ஊரில் தீராத பொதுப் பிரச்னைகளையும் தனி நபர்களுக்கு அரசு அநீதி இழைத்திருக்குமானால் அது பற்றிய சோகக் கதையையும் முழு முகவரியோடு எழுதி அனுப்பலாம். தனி நபர் அல்லது சமுதாய சாதனையைப் பற்றியும் எழுதலாம். சுருக்கமான உங்கள் கடிதங்களைப் பரிசீலித்த பிறகு நமது பிரதிநிதிகள் மதுரை மாவட்டத்தில் உள்ள சில முக்கியமான ஊர்களுக்கு நேரில் வருவார்கள். அவர்கள் வரும் தேதியை முன் கூட்டியே கடிதம் எழுதித் தெரிவிப்போம். நீங்கள் அவர்களைச் சந்தித்துப் பேசலாம். ஆதாரங்களைக் காட்டலாம்; தேவையான விளக்கங்களை அளிக்கலாம். பிரச்னைக்குரிய இடங்களுக்கு அழைத்துப் போகலாம். பின்னர் நம் பிரதிநிதிகள், சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அல்லது அரசியல்வாதிகளைச் சந்திக்க முயற்சி மேற்கொள்வார்கள். கல்கி பிரதிநிதிகள் சேகரிக்கும் தகவல்கள், கட்டுரைகளாகவும் பேட்டிகளாகவும் புகைப்படங்களுடன் கல்கியில் பிரசுரமாகும்.

**மதுரை மாவட்டத்தினரின் பிரச்னைகள் — சாதனைகளைத் தாங்கிய கடிதங்கள் கல்கி அலுவலகத்துக்கு வந்து சேரக் கடைசி தேதி: 20.1.86. உறையின்மேல், "மாதம் ஒரு மாவட்டம் — மதுரை" என்று கண்டிப்பாகக் குறிப்பிட வேண்டும்.**

அடுத்த மாவட்டம் பற்றிய அறிவிப்பு அடுத்த மாதம் முதல் வாரக் கல்கி இதழில் இடம் பெறும்.

— **ஆசிரியர்.**

# உயிரோடு விளையாடும் பாலம்!



உடைந்து போன பழைய பாலத்தின் வழியாக மக்கள் நடந்து செல்கின்றனர்.



பாதியில் நிற்கும் புதிய பாலம்!

விஜயராணி.



**நா**கர்கோவிலிலிருந்து குளச்சல் செல்லும் நெடுஞ்சாலையில், மணவாளக்குறிச்சி என்ற ஊர் அமைந்துள்ளது. இந்த ஊர் எல்லையில்தான் வள்ளியாறு ஓடி... கடலில் கலக்கின்றது. இந்த வள்ளியாற்றின்மேல் கட்டப்பட்டுள்ள ஒரு சிறிய பாலம்தான், மணவாளக்குறிச்சியை நாகர்கோவில் நெடுஞ்சாலையோடு இணைக்கின்றது.

இந்தப் பாலம், சுமார் இருபத்தைந்து அடி நீளமும், சுமார் ஒன்பது அடி அகலமும் கொண்டது. ஒரே நேரத்தில், ஒரு பஸ் மட்டுமே இப்பாலம் வழியாகச் செல்ல முடியும். உறுதியான இரும்புக் குழாய்களை நீரினுள் ஆழமாக ஊன்றி, அதற்குமேல் படுக்கையாக இரும்புப் பாளங்களைப் பரப்பி, அதில் தார் போட்டு... இது நாள் வரை பாலமாகப் பயன்படுத்தினர். மணவாளக்குறிச்சியில் அமைந்துள்ள, மத்திய அரசுக்குச் சொந்தமான மணலாலையில் (Indian Rare Earths Ltd.) பிரித்தெடுக்கப்படும் உலோக மணலைத் தூத்துக்குடிக்கு எடுத்துச் சென்று... அங்கிருந்து கப்பல்கள் மூலமாக ஏற்றுமதி செய்கிறார்கள்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இப்பாலம் அமைக்கப்பட்டது.

இந்தச் சிறிய பாலம் நலிந்து போனதைக் கண்டு, புதிய பாலம் கட்ட (பல ஆண்டுகளுக்குப் பின்) அரசு முன் வந்தது. ஆனால், பாலம் கட்டும் பணி பாதியிலேயே நிற்கின்றது. இந்த நேரத்தில், குற்றுயிரும், குலையுயிருமாக இருந்த பழைய பாலம் மண்டையைப் போட.... இப்பொழுது அரசனுமில்லை, புருஷனுமில்லை என்ற கதையாகப் பழைய பாலமுமில்லை, புதிய பாலமுமில்லை என்ற நிலையில் போக்குவரத்து துண்டிக்கப்பட்டு... மணவாளக்குறிச்சி மக்கள் அவதிப்படுகின்றனர்.

இதுவரை மணவாளக்குறிச்சி பாலத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்த, குளச்சல் – நாகர்கோவில் பஸ்களில் பாதியை, குளச்சல் – மணவாளக்குறிச்சி என்றும், மீதியை மணவாளக்குறிச்சி பாலம் – நாகர்கோவில் என்றும்பிரித்துவிட்டிருக்கிறார்கள். இதனால் இந்த வழியாக நாகர்கோவில் செல்லுவதற்கு வரும் பயணிகள் (தெரியாமல் மாட்டிக் கொண்டவர்கள்) மணவாளக்குறிச்சி வந்து... அங்கிருந்து பழைய பாலம் வழியாக நடந்து அக்கரைக்குச் சென்று... அங்கே ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரம்காத்திருந்து நாகர்கோவில்பஸ்ஸைப் பிடிக்க வேண்டும். இதனால், அதிகச் செல



வும் நேர விரயமும் ஏற்படுகின்றது.

இந்த நிலையில் புதிய பாலம் எந்த நிலையில் இருக்கின்றது என்பதைக் கண்டறிவதற்காக மணவாளக்குறிச்சிக்குச் சென்று பார்த்தோம். ஆற்றினுள், ஒருபக்கம் நான்கும், மறுபக்கம் இரண்டுமாகப் பெரிய சைஸ்களில் கான்கிரீட் தூண்கள் கட்டப்பட்டிருக்கின்றன. அவை நீருக்குமேல் மூன்றடி உயரத்தில் தலைதூக்கியிருந்தன. வெறும் நான்கு பேர் மட்டும் எறும்பு ஊர்வது போல், குவிந்து கிடக்கும் மணலை மெதுவாக வெட்டி, அப்புறப்படுத்திக்கொண்டிருந்தனர். இந்த வேகத்தில் பாலத்தின் வேலை நடைபெற்றால்... புதிய பாலம் கட்டி முடிப்பதற்குள், அடுத்த நூற்றாண்டு பிறந்துவிடும்!

பழைய பாலத்தின் ஒரு பக்கம் மட்டுமே,' பாலம் பழுதடைந்திருப்பதால், கனரக வாகனங்கள் செல்லக் கூடாது!' என்ற அறிவிப்பை வைத்திருக்கிறார்கள். மறுபக்கத்தில் இல்லை. இந்த வழியாகத் தெரியாமல் ஏதாவது கனரக வாகனங்கள் பாலத்தில் வந்தால்...?

புதிய பாலம் கட்டுவதற்காகக் குவித்துப் போடப்பட்டிருக்கும் மணலில், தன் நீண்ட கால்களைப் பரப்பிக் கொண்டு, தலைகுப்புறப் படுத்துக்கிடந்தது, ஓர் இரும்பு போர்டு. பாலத்தைப் பற்றி ஏதாவது செய்தியிருக்கும் என்று நினைத்து... இரண்டு பேராக அந்த போர்டைத் தூக்கி, நிமிர்த்திப் போட்டோம்.

அதில் பாலம் அமைந்துள்ள நெடுஞ்சாலையின் விவரம், பாலம் கட்டுவதற்காக அரசு ஒதுக்கியிருக்கும் பணத்தின் மதிப்பு (ரூ. 27.50 லட்சம்), அதைக் கான்ட்ராக்ட் பிடித்திருப்பவரின் பெயர், (எஸ். கோபாலன்) மற்றும் அவர் முகவரியும் இடம் பெற்றிருந்தன. அதற்குக் கீழே, பாலம் கட்டத் தொடங்கிய நாள், கட்டி முடிக்க வேண்டிய நாள் என்று குறிப்பிட்டிருந்ததற்கு எதிராக ஒரு விவரமுமில்லை!

எனவே, இந்தப் பாலத்தின் முழுக்கதையையும் அறிந்து கொள்ள, மணவாளக்குறிச்சியைச் சேர்ந்த, எஸ். ரமேஷ் என்ற இளைஞரை அணுகினோம்.

''அக்டோபர் '83ல் அடிக்கல் நாட்டி, 1984ம் ஆண்டு புதிய பாலத்தின் வேலை தொடங்கப்பட்டது. பழையபாலத்தையொட்டியே, புதிய பாலம் கட்டுவதற்காக ஆற்றினுள் வட்ட வடிவில் பில்லர்கள் அமைக்கும் வேலைதான் முதலில் ஆரம்பமானது. அதற்குள், பழைய பாலம் பழுதடைந்து விட்டது. இதனால், பழைய பாலம் வழியாகக் கனரக வண்டிகள் செல்வது தடுக்கப்பட்டது. அதே நேரத்தில் புதிய பாலம், கட்டும் பணியும் வெறும் பில்லரோடு நின்று விட்டது!

''குமரி மாவட்டத்திலுள்ள திருவட்டார் பக்கத்தில் இதே மாதிரி ஆற்றில் ஒரு புதிய பாலம் கட்டுகின்றார்கள். அங்கே, பழைய பாலத்தை விட்டுக் கொஞ்சம் தள்ளி, புதிய பாலம் கட்டுகிறார்கள். பழைய பாலம் வழியாகப் போக்குவரத்தும் நடைபெறுகின்றது. இங்கேயும் முதலில் அப்படிப் பழைய பாலத்தை விட்டுக் கொஞ்சம் தள்ளிக் கட்டத் தான் முடிவு எடுக்கப்பட்டது. ஆனால், அப்படிக் கட்டும்பொழுது, ஆளுங்கட்சிப் பிரமுகர் ஒருவரின் தென்னந்தோப்புகள் போய் விடும் என்பதால்... இப்படிப் பழைய பாலத்துக்குப் பக்கத்திலேயே கட்ட ஆரம்பித்தார்கள்.

''இரவில், பாலத்தில் விளக்குவசதியில்லை. தெரியாமல், ஏதாவது வாகனங்கள் வந்தால் ஆற்றோடு சென்று, கடலில் கலக்க வேண்டியதுதான்! சுமார் மூன்று மாதங்களுக்கு முன்பு, நாகர்கோவில் கலெக்டர் ஆபீஸில் நடைபெற்ற மாவட்ட வளர்ச்சி மன்றக்கூட்டத்தில், பத்மனாபுரம் எம். எல். ஏ. வை. பாலசந்தர், 'இந்தப் பாலம் எப்பொழுதுமுடியும்...?' என்று கேட்டபொழுது, நெடுஞ்சாலைப் பொதுப்பணித்துறை கோட்டப் பொறியாளர், '1985, டிசம்பர் 31க்குள் பாலம் கட்டி முடிக்கப்படும்!' என்று கூறினார். பாலத்தின் நிலைமையைப் பார்த்தால், 1986, டிசம்பர் 31க்குள்ளாவது இதைக் கட்டி முடிப்பார்களா என்பது சந்தேகமாக இருக்கிறது!

''அமைச்சர்களோ, அதிகாரிகளோ மணவாளக்குறிச்சி வரும்பொழுது, அரசு வாகனங்களில் இந்த வழியாக வராமல், திங்கள் சந்தை வழியாகச் சுற்றி வருகின்றார்கள். ஆனால், அப்பாவி மக்கள் இந்த வழியாகத் தான் செல்ல வேண்டிய நிலைமை! அவர்களுக்குச் சுற்றிச் செல்ல வேண்டுமென்றால், இரட்டிப்புச் செலவாகும்.

''இதற்கிடையில், வருகிற மார்ச் மாதம் பிரசித்தி பெற்ற மண்டைக்காடு பகவதியம்மன் கோவில் கொடை நடக்கவிருக்கிறது. இக்கோயில் கொடைக்கு லட்சக்கணக்கான மக்கள் இவ்வழியாகத்தான் வர வேண்டும். மேலும், கோயிலுக்குக் கேரள மாநிலத்திலிருந்து வரும் பக்தர்களும் இவ்வழியாகத் தான் சுசீந்திரம், கன்னியாகுமரி போன்ற இடங்களுக்குச் செல்ல வேண்டும். இப்படிப்பட்ட சூழ்நிலையில், போக்குவரத்து துண்டிக்கப்பட்டிருப்பதை நினைத்தால்... வருத்தமாக இருக்கிறது. கேரளாவிலிருந்து வரும் பக்தர்களுக்கு, இந்த அரசு என்ன வசதி செய்து கொடுக்கப் போகின்றதோ...?

''ஒழுங்காகப் பாலம் வேலை நடந்திருந்தால், எப்பொழுதோ பாலம் கட்டி முடிக்கப்பட்டு.... மக்களுக்கு வசதியாக இருந்திருக்கும். எல்லாவற்றிலும்


* எஸ். ரமேஷ்.


* டி. செல்லத்துரை.



மெத்தனமாகச் செயல்படும் இந்த அரசுக்கு, இந்தப் பாலத்தின் முக்கியத்துவம் எப்பொழுது தெரியப் போகிறதோ?'' என்று வேதனையோடு குறிப்பிட்டார், இளைஞர் ரமேஷ்.

மணவாளக்குறிச்சி வியாபாரிகள் அனை வரும் இந்த வழியாகத்தான் சரக்குகளை ஏற்றிக் கொண்டு வரவேண்டும். தற்போது, அவர்கள் தங்கள் சரக்குகளை எப்படிக் கொண்டு வருகிறார்கள் என்பதை அறிய, மளிகைக் கடைக்காரர், டி. செல்லத்துரையிடம் கேட்டோம்.

''அந்தக் கஷ்டத்தை ஏங்க கேட்கிறீங்க...? வழக்கமாக இங்குள்ள என்னைப் போன்ற வியாபாரிகளுக்குக் கோட்டாறிலிருந்து இந்த வழியாகத்தான் லாரிகளில் சரக்குகள் வரும். இப்ப பாலம் உடைஞ்சதாலும், புதிய பாலம் கட்டி முடிக்கப்படாததாலும் எங்களுக்கு வரவேண்டிய சரக்குகள் அரசன்விளை, குருந்தன்கோடு, இரணியல், திங்கள் சந்தை, வழியாக... மண்டைக்காடு சுற்றி, மணவாளக்குறிச்சி வருதுங்க! அதாவது தலையைச் சுற்றி மூக்கைத் தொடுறது மாதிரி! இதனால், எங்களுக்குத் தினசரி சுமார் இரண்டாயிரம் ரூபாய் அதிகப்படியான செலவு ஆகிறதுங்க. நாங்களும் வியாபாரம் செஞ்சு பிழைக்கிறவங்கதான். இந்த நஷ்டத்தை எங்களால் எப்படித் தாங்க முடியும்...? லட்சக்கணக்கில பணத்தைக் கொட்டிப் பாலம் கட்டுறாங்களாம்...! வெறும் ஒரு பத்தாயிரத்தைக் கொண்டு, பழைய பாலத்தைக் கொஞ்சம் ரிப்பேர் பாத்தா, அதைத் தற்காலிகமாகப் பயன்படுத்தலாமுங்க..! பாலத்தின் கரையில் கொடுக்க வேண்டிய மாமூலைக் கொடுத்தா... கனரக வண்டிகளைப் பாலத்திலே விடுறாங்க...!'' என்று வருத்தத்தோடு சொன்னார், செல்லத்துரை.

அங்கிருந்து, நான்கு கிலோமீட்டர் தொலைவிலுள்ள மண்டைக்காட்டுக்கு வந்தோம். இங்கிருந்து தினசரி மணவாளக்குறிச்சி வழியாக அலுவலகம், பள்ளி, கல்லூரிகளுக்குச் செல்பவர்கள், தற்போது எந்த வழியாக நாகர்கோவில் செல்லுகின்றனர் என்பதை அறிய விரும்பினோம்.

மண்டைக்காட்டைச் சேர்ந்த மாணவர், எம். சந்திரன் தினசரி தான்படும் அவதியை விவரித்தார்.

''நான் கோணத்திலுள்ள ஐ. டி. ஐ. யில் டிராப்ட்ஸ்மேன் குரூப்பில் படிக்கிறேன். முன்பு மண்டைக்காடு, மணவாளக்குறிச்சி வழியாகச் செல்லும் நாகர்கோயில் பஸ்ஸில் செல்வேன். இப்பொழுது, மணவாளக்குறிச்சி பாலம் உடைந்துவிட்டதால், இரண்டு பஸ்கள் ஏறி, இறங்க வேண்டிய நிலைமை! ஐ. டி. ஐ. வகுப்பு, காலை ஏழு மணிக்கு ஆரம்பமாகும். இதனால், அதிகாலை 4.30 மணிக்கே எழும்பி, தயாராகி, 5.30 மணிக்கு சைக்கிளில் மணவாளக்குறிச்சிக்குச் செல்வேன். காரணம், அந்த நேரத்தில் மணவாளக்குறிச்சி செல்ல மண்டைக்காட்டிலிருந்து பஸ் கிடையாது. மணவாளக்குறிச்சி பாலத்தின் அக்கரையிலிருந்து சரியாக 6.00 மணிக்குப் புறப்படும் நாகர்கோவில் பஸ்ஸில் ஏறி... கோணத்திற்குச் செல்வேன். கொஞ்சம் தாமதமாகி விட்டாலும், சரியான நேரத்தில் வகுப்புக்குச் செல்ல முடியாது. பாலத்திலிருந்து நாகர்கோவில் செல்லும் பஸ்ஸிற்குக் குறிப்பிட்ட கால அட்டவணையோ, டைம்கீப்பரோ இல்லாததால் டிரைவர், கண்டக்டருக்கு வசதியான நேரத்தில் வந்து திரும்பிச் செல்கின்றனர். இதனால் பாதிக்கப்படுவது என் போன்ற மாணவ — மாணவிகள் தான். மாலையிலும் இதே கதைதான்! நான் மண்டைக்காடு to கோணம் 'கன்ஸஷன்' டிக்கெட் எடுத்திருக்கிறேன். இருப்பினும், தினசரி காலை 4 கி. மீ., மாலை 4 கி. மீ. தூரம் சைக்கிளில் பயணம் செய்ய வேண்டிய கஷ்டம் வேறு!'' என்றார், மாணவர் சந்திரன்.

இம்மாணவரைப் போன்று, தினசரி ஐம்பதுக்கு மேற்பட்ட மாணவ — மாணவிகள் இப்படிக் கஷ்டப்பட்டு... பள்ளி, கல்லூரிகளுக்குச் சென்று படிக்கின்றனர்!

அடுத்து, மண்டைக் காட்டிலிருந்து சுமார் ஒரு கி. மீட்டர் தொலைவிலுள்ள நடுவூர்கரையிலிருந்து தினசரி நாகர்கோவில் சென்று, பாலிடெக்னிக் வகுப்பில் படிக்கும் மாணவி, ஜி. விஜயராணியைச் சந்தித்த போதும் சந்திரனைப் போலவேதான் தனது கஷ்டங்களைச் சொன்னார்.

புதிய பாலம் கட்டி முடிக்கப்படாததற்கு என்னதான் காரணம்? அரசு முதலில் போட்ட எஸ்டிமேட் தொகையைவிட, தற்போது அதிகச் செலவாகும் என்பதாலும், இதுவரை செலவான பணத்தை அரசு கொடுக்காததாலும்தான் பாலம் கட்டும் பணி பாதியில் நிற்பதாகப் பரவலாக மக்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

பணமில்லை என்று இன்னும் எத்தனை காலத்துக்குத்தான் தள்ளிப் போட முடியும்? அப்படித் தள்ளிப் போடுவது அந்தப் பகுதி மக்களின் உயிருக்குத்தான் ஆபத்தாக முடியும். இதை அரசாங்கம் உணராமல் இருப்பதுதான் கொடுமையிலும் கொடுமை!

செய்தித் தொகுப்பு:
**குளச்சல் இப்ராஹிம்.**

புகைப்படங்கள்: **ரமீஸ் ஸ்டுடியோ.**

# அடுத்த இதழ்...

## பாண்டிச்சேரி சிறப்பிதழ்



பாண்டிச்சேரி மாநிலத்தின் சில பகுதிகள் கேரளத்திலும் ஆந்திராவிலும் இருப்பது உங்களுக்குத் தெரியுமா? பாண்டிச்சேரி மட்டுமின்றி காரைக்கால், யேனம், மாஹெ ஆகிய பகுதிகளுக்கும் நேரில் சென்று பார்த்து மக்களையும் ஆட்சித் தலைவர்களையும் பேட்டி கண்டு சேகரித்த ரசமான தகவல்கள்.



## ராஜேஷ்குமார்

எழுதும்

## A ஃபார் ஆப்பிள்; M ஃபார் மர்டர்!

மர்மத் தொடர் கதை

ஆரம்பம்

## வாஸந்தி

எழுதும்

அயல்நாட்டுப் பயணத் தொடர்

## கிழக்கே ஓர் உலகம்



தாய்லாந்து, ஆஸ்திரேலியா, பிஜி தீவுகள் முதலிய நாடுகளுக்குப் பயணம் சென்று திரும்பிய அனுபவங்கள்.

அதிக பக்கங்கள் : அதே விலை.

கவர் ஸ்டோரி...

# முதலாண்டின் முடிவில்...

பிரதமர் ராஜீவ் காந்தி பலவிதங்களில் அதிர்ஷ்டக்காரர். பிரதமர் பதவி அவரைத் தேடிக் கொண்டு போயிற்று. அவருடைய தாயார் இறந்தது துர்பாக்கியம் என்றாலும் அந்தச் சம்பவம் ஸ்ரீராஜீவ் காந்திக்குப் பிரதமர் பதவி கிடைக்கக் காரணமாக இருந்தது. ஸ்ரீமதி காந்தி விரும்பிச் செயல்பட்டதும் அதற்காகத்தான். ஆனால் அவர் உயிரோடு இருந்து தம் மகனை அரியாசனத்தில் அமர்த்த வேண்டும் என்று விரும்பியிருந்தால், அது

• ஜனதா தலைவர் மதுதந்தவாதே, பாரதிய ஜனதா கட்சித் தலைவர் எல். கே. அத்வானி... போன்ற எதிர்க் கட்சித் தலைவர்களுடன் பஞ்சாப் பிரச்னை பற்றிப் பேசிய போது...



எளிதாக இருந்திருக்காது. ஏன், காங்கிரஸ் கட்சியில்கூட ஏகோபித்த ஆதரவு இருந்திருக்காது.

மற்றொரு நோக்கிலிருந்து பார்த்திருந்தால் கூட ஸ்ரீராஜீவ் காந்தி கொடுத்து வைத்தவர்தான். ஜவாஹர்லால் நேரு பிரதமரான பொழுது, ஏன் சர்தார் படேலுக்கு அப்பதவியைக் கொடுக்கக் கூடாது என்று ஒரு வலுவான சாரார் கட்சி கட்டினார்கள். மகாத்மா காந்தியின் நேரடி ஆதரவு அவர் பாரதத்தின் தலைவராக உதவியது.

ஸ்ரீமதி காந்தி பிரதமரான பொழுது தமிழ் நாட்டின் பெருந்தலைவர் ஸ்ரீ காமராஜர், மாநில முதல்வர்களைக் கூட்டி அவருக்கு ஆதரவு தேடினார். அம்முயற்சியில் அப்பொழுது வெகு பலம் கொண்ட காரியதரிசியாகத் திகழ்ந்த ஸ்ரீ ஜி. ராஜகோபாலன் பெருதவி செய்தார். இந்தச் சாணக்கியம் செய்யாது இருந்திருந்தால் ஸ்ரீ மொரார்ஜி தேசாய் ஜெயித்திருப்பார். பிற்காலத்தில் ஸ்ரீ தேசாயுடன் பேசும் பொழுது பல தடவை அவர், "நான் காமராஜுக்கு எந்தவிதமான கெடுதலும் செய்ததில்லை. ஏன் அவர் எனக்கு எதிராகச் செயல்பட்டார் என்பது விளங்கவில்லை" என்று சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீ ராஜீவ் காந்தியைப் பிரதமராக்க வேண்

டும் என்று முடிவு செய்த சிலரில் ஒரு நபர் ஸ்ரீ ஆர். வேங்கடராமன், உப ஜனாதிபதி. ஸ்ரீமதி காந்தி காலமான தினம் ஸ்ரீ வேங்கடராமன்தான் ஜனாதிபதியின் அதிகாரங்களை வகித்தார். அந்த ஹோதாவில் அவர் ஸ்ரீமதி காந்தியின் அந்தரங்கக் காரியதரிசியான ஸ்ரீ ஆர்.கே.தாவனை கல்கத்தாவிற்கு அனுப்பி அவரை அழைத்து வரச் சொன்னார். அதே தினத்தில் அவருக்கு பிரதமராகப் பதவிப் பிரமாணம் செய்து வைக்கப்பட்டது. காதும் காதும் வைத்தாற்போல் நிகழ்ந்த இந்தச் சம்பவம், ஆங்கிலத்தில் **Fait Accompli** என்று சொல்வதுபோல் அமைந்தது..அன்று நிகழ்ந்த சூழ்நிலையில் எவ்வளவு உயர்ந்த தலைவராக இருந்தாலும் அவர் ஸ்ரீ ராஜீவ் காந்தியின் பதவியேற்பை எதிர்த்திருக்க முடியாது.

ஸ்ரீமதி காந்திக்கு ஜோதிடம் மற்றும் வருங்காலத்தைக் கணிக்கும் முறைகளில் ஈடுபாடு உண்டு. முன்கூட்டியே காங்கிரஸ் கட்சியில் ஸ்ரீ ராஜீவ் காந்தியைப் புகுத்தினார். பிறகு அமேதி தொகுதியிலிருந்து லோக் சபைக்கு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்க ஏற்பாடு செய்தார். இந்தப் பின்னணி மிகவும் முக்கியம்.

ஸ்ரீ ராஜீவ் பிரதமரான பிறகு, அவர் பழைய மந்திரிகளையே பெரும்பாலும் தம் மந்திரி சபையில் சேர்த்துக் கொண்டது. முதல் சாணக்கியம். இந்தச் செய்கையால் அவர் எந்த அடிப்படையிலும் யாரும் தமக்கு எதிராகக் கட்சி கட்டாமல் பார்த்துக் கொண்டார். ஸ்ரீ சஞ்சய் காந்தி உயிருடன் இருந்த வரை முற்றிலும் அரசியலை வெளியிலிருந்து பார்வையிட்டுக் கொண்டிருந்த ஸ்ரீ ராஜீவுக்குத் தம் தம்பியும் தாயாரும் கையாண்ட சில முறைகள் பிடிக்கவில்லை. அவற்றில் சில காங்கிரஸ் அல்லாத அரசுகளுக்குத் தலைவலி கொடுப்பது, மத்திய அரசுக்குக் கீழ் உள்ள பல பொது நிறுவனங்களில் உள்ள காலிஸ்தானங்களை அமைச்சரவையில் உள்ளவர்கள் தங்கள் இஷ்டப்படி நிரப்புவது போன்றவை. அதனால் அனாவசியமாகக் கெட்ட பெயர்தான் கிட்டுகிறது என்பது அவருடைய அபிப்ராயம். அவருடைய நண்பர்கள், தனியார் துறைகளில் உயர்ந்த பதவிகளை வகித்தார்கள். இந்திய அரசு செயல்படும் முறை, வரிகள் அமைப்பு, பொருளாதாரம் போன்றவற்றில் அவருக்குப் பரிச்சயம் உண்டு. ஸ்ரீ அருண் ஸிங், கல்கத்தாவில் தனியார் துறையில் முதிர்ந்த அனுபவம் உள்ளவர். ஆகவே அவரைத் தமக்கு ஒரு பக்க பலமாகச் சேர்த்துக் கொண்டதில் வியப்பில்லை!

ஸ்ரீமதி காந்தி இருந்த பொழுதே ஸ்ரீ அருண் நேரு, ஸ்ரீ ராஜீவுக்கு ஆலோசகர். அவ்வப்பொழுது இருவரும் சில மூத்த தலைவர்களுடன் கலந்தாலோசிப்பதுண்டு. அந்த நாட்களிலேயே அரசியலில் அவர் தாயாருக்கு யாரெல்லாம் வெகு நெருக்கமாக இருந்தார்களோ அவர்களுக்கு ராஜீவ் உற்சாகம் கொடுக்கவில்லை.

ஸ்ரீ தாவனைப் பற்றி ஸ்ரீ ராஜீவுக்கு நன்





* ஆதிவாசிகளுக்கான திட்டங்கள் செயல்படுவதைக் கவனிப்பதற்காகச் செல்கிறார் ராஜீவ்.....

முகத் தெரிந்திருந்ததால் அவருக்குக் காரிய தரிசி பதவி கொடுக்க வேண்டும் என்று நினைக்கவில்லை. தமக்கு காங்கிரஸ் கட்சியில் காரியதரிசியாக இருந்த ஸ்ரீ ஜார்ஜையும் அரசில் புகுத்தவில்லை. அதற்கு மாறாக ஸ்ரீ லால் பகதூர் சாஸ்திரிக்கு அந்தரங்கக் காரிய தரிசியாக இருந்த வேங்கடராமனை எடுத்துக் கொண்டார். பிரதம காரியதரிசி மூலமே எல்லா அரசு பைல்களும் நடமாடும். பிரதமரைப் பார்க்க வேண்டும் என்று தினம் பல நூறு விண்ணப்பங்கள் வந்து குவியும். இவற்றைப் பிரதமரிடம் பிரஸ்தாபித்து அவகாசம் வாங்குவது அல்லது விண்ணப்பதாரர்களுக்குத் தம் இயலாமையைத் தெரிவிப்பது எல்லாமே பிரதம காரியதரிசி மூலம் தான்.

பிரதமரானபின் ஸ்ரீ ராஜீவ் வெளி நபர்களைச் சந்திப்பதை வெகுவாகக் குறைத்துவிட்டார். பண மூட்டைகள், தொழிலதிபர்கள், கட்சித் தலைவர்கள் அவரைச் சந்திக்கக் கியூவில் நின்றனர். பொறுக்கி எடுத்த



அரசியல் தலைவர்களைச் சந்தித்தால், நாட்டில் உள்ள சூழல்கள் தெரிய வரும் என்று அவருடைய அந்தரங்கக் 'காரியதரிசி ஆலோசனை கூறினார்.

ஸ்ரீ ராஜீவ் காந்தியின் திறமைக்கு அவர் பதவியேற்ற குறுகிய காலத்திற்குள்ளேயே சோதனை ஏற்பட்டது. பஞ்சாபில் பயங்கரவாதிகளின் அட்டகாசம் கட்டுக்கடங்காமல் போய்க் கொண்டிருந்ததோடு அதற்கு டில்லியிலும் பக்கதூலை ஏற்பட்டது. 'டிரான்ஸிஸ்டர் பாம்' வெடிகள் பல டஜன்கள் அப்பாவிகளின் உயிர்களைக் குடித்தன...

புது பிரதமர் எப்படிச் செயலபடுவார் என்பதை ஆழம் பார்ப்பது போன்று டாக்டர் ஜகஜித் சௌஹான் தம் கைவரிசையைக் காட்ட முயன்றார். சூழ்நிலையை ஆராய்ந்து பஞ்சாப் பிரச்னை ராணுவப் பிரச்னை அல்ல; அது அரசியல் பிரச்னை என்று ஸ்ரீ ராஜீவ் அறிந்து கொண்டார். அகாலிகளுடன் பேச்சு வார்த்தை நடத்தி அவர்களுக்குப் பலம் கொடுத்தால் சீக்கியர்கள் பயங்கரவாதிகளுக்குப் பயப்பட்டு ஒடுங்குவதைத் தடுக்கலாம் என்பதை நன்கு புரிந்து கொண்டார்.

மற்றொரு பக்கத்தில் பிரச்னைக்குத் தீர்வு காண எதிர்க் கட்சிகளுடைய ஒத்துழைப்புத் தேவை என்பதையும் அறிந்து கொண்டார். காரணம்,இ. காங்கிரஸுடன் பேசுவதில்லை என்று அகாலி தலைவர்கள் பிடிவாதமாக இருந்தார்கள். எனவே ஸ்ரீ ராஜீவ், ஜனதா தலைவர்கள் ஸ்ரீ இந்தர் குஜ்ரால், ஸ்ரீ மதுதந்தவாதே, மார்க்ஸிஸ்ட் தலைவர் ஸுர்ஜீத் போன்றவர்களுடைய உதவியை நாடிப் பெற்றார்.

இந்தப் பரந்த மனப்பான்மை ஸ்ரீமதி காந்தியின் அணுகுமுறைக்கு முற்றிலும் மாறானது.

வரட்டு கௌரவம் கொண்டாடாமல் சிக்குண்ட நூல் கண்டைப் பிரிப்பதுபோல் கட்டம் கட்டமாகப் பிரித்து வெற்றி கண்டார் ஸ்ரீ ராஜீவ். அகாலிகள் கேட்டதையெல்லாம் கொடுத்துவிட்டார் என்று சொல்வது உண்மைக்குப் புறம்பானது.

அகாலித் தலைவர்களின் போக்கு மாறுவதற்கு ஸ்ரீ தந்தவாதே ஒரு பெரும் காரணம். உடன்பாடு ஒன்று ஏற்பட்டவுடன் அது பஞ்சாபில் சூழ்நிலையை மாற்றிற்று. பயங்கரவாதிகள் பதுங்கலானார்கள். பின்னர் நடந்த தேர்தல், ஸ்ரீ ராஜீவின் அணுகுமுறை சரி என்பதை நிரூபித்தது.

அஸ்ஸாம் மாணவர்களுடைய கட்சி வெகு வலுவானது. இன்று உள்ள பங்களாதேஷிலிருந்து ஏக்கச்சக்கமாகச் சென்ற இருபது ஆண்டுகளாகத் திட்டமிட்டு, பல்லாயிரக் கணக்கானவர்கள் அஸ்ஸாமுக்குள் ஊடுருவியுள்ளார்கள். இதில் இரு சாராரும் (ஹிந்துக்களும் முஸ்லீம்களும்) உள்ளடக்கம். என்றலும் முஸ்லீம்களின் எண்ணிக்கை அதிகம். இதில் வியப்பூட்டும் அம்சம் என்னவென்றால் அவர்கள் இந்தியப் பிரஜா உரிமை கோரிப் பெற்றார்கள். அத்துடன் வோட்டுரிமையும் கிடைத்தது. அஸ்ஸாம் மாணவர்களின் கேள்வி என்னவென்றால் இம்மாதிரியான செயலுக்கு அரசியல் நோக்கம் இல்லையா? என்பதுதான்.

தமிழ்நாட்டிலிருந்து கணிசமான மக்கள் டில்லிக்கு வந்து வாக்காளர் பட்டியலில் சேர்ந்தால் அது முறையானது. ஆனால், தெரிந்து, ஒரு காலத்தில் நெருப்புக் கக்கிய பாகிஸ்தானிகள் இந்தியப் பிரஜைகள் ஆவது என்றால் இந்திய அரசியல் சாஸனத்துக்கே விரோதமானது என்பதுடன் அதற்கு அரசியல் நோக்கமும் உண்டு. இதனால் அஸ்ஸாம் மாணவர்கள் 1967—ம் ஆண்டு முதல் ஏற்பட்ட ஊடுறுவலைக் கண்டு பிடித்துப் போலி வாக்காளர்கள் பதிவை நீக்க வேண்டும் என்று கோரி ஆர்ப்பாட்டம் துவங்கியது நியாயமே.

இந்தப் பிரச்னையில் ஸ்ரீமதி காந்தியின் அணுகுமுறை பங்களாதேஷிலிருந்து வந்து பதிவு செய்து கொண்டவர்கள் எல்லோரும் காங்கிரஸ் ஆதரவாளர்கள் ஆகிவிடுவார்கள் என்பது. அஸ்ஸாம் தேர்தல் என்ற பித்தலாட்டத்தையும் அவர் நடத்தினார். இதெல்லாம் அபத்தம் என்பது ஸ்ரீ ராஜீவுக்குத் தெரிந்ததுடன் இங்கு மாணவர்களுடன் உட்கார்ந்து கொண்டு தீர்வு காண்பதைத் தவிர வேறு வழியில்லை என்று முடிவு செய்து, வெற்றி கண்டார். பஞ்சாப், அஸ்ஸாம் இரு பிரச்னைகளும் எந்த வல்லவனுக்கும் ஒரு பரீட்சை. இதில் வெற்றி கண்ட ஸ்ரீ ராஜீவ் தம் தரத்தை நிரூபித்துவிட்டார்.

இந்தியாவில் அரசியல்வாதிகளுக்குக் குறைவா? அல்லது நிர்வாகிகளுக்குத்தான் குறைவா? ஆனால் அப்பொழுது நிகழ்ந்த தேர்தலில் வெற்றி பெற்ற மத்தியப் பிரதேச முதல்வரைத் தன் பதவியை ராஜினாமா செய்து,பஞ்சாப் கவர்னர் பதவியை ஏற்றுக் கொள்ளச் செய்தது அவருடைய ஆழ்ந்த அறிவை வெளிப்படுத்தியிருக்கிறது. ஸ்ரீ அர்ஜுன் ஸிங் எப்படி, சாமர்த்தியமாகத் தம் மாநிலத்தில் அரசை நிர்வகித்து, பாரதிய ஜனதா கட்சியைப் பலவீனப்படுத்தினார் என்பதை எடை போட்டார்.

ஒவ்வொரு பாலத்துக்கும் வளைவுகள் உள்ளதுபோல் ஸ்ரீ அர்ஜுன் ஸிங் மத்திய மதகு. அவருடைய சாதுர்யமும் ஆற்றலும் கீழே இறங்கிய அகாலிகளைத் திருப்திப் படுத்தி, இறுதியில் டில்லிக்குப் பேச்சு வார்த்

தைக்குக் கொண்டு போகச் செய்தது. தவிர, அவர் அம்ரிட்ஸர்-சண்டிகார் நிலைமையைச் சேர்த்துக் கவனித்துக் கொஞ்சம் கொஞ்சமாகப் பயங்கரவாதிகளின் அட்டகாசத்துக்கு லகான் போட்டார்.

பஞ்சாப் பிரச்னை முடிந்து, தேர்தலும் முடிந்து, எதிர்த்தரப்பில் இருந்த அகாலிகள் அரசுக்கு வந்தது ஸ்ரீ ராஜீவுக்கும் சரி, ஸ்ரீ அர்ஜுன் ஸிங்குக்கும் சரி பெரும் வெற்றி தான்.

இவ்வளவு கடினமான, மனத்தைக் கலக்கும் பிரச்னைகளை எதிர்நோக்க அவருக்கு என்ன அனுபவம் என்று அவருடைய விசேஷ உதவியாளராக இருந்த ஸ்ரீ வி.எஸ். வேங்கடராமனைக் கேட்டேன். ஸ்ரீ வேங்கடராமன் காலஞ்சென்ற ஸ்ரீ லால்பகதூர் சாஸ்திரிக்கு அந்தரங்கக் காரியதரிசியாக இருந்தவர். பண்புக்கு இலக்கணமாக விளங்குகிறவர். வி.எஸ்.வி. என்ற சுருக்கப் பெயரால் நெருங்கியவர்கள் அவரை அழைப்பதுண்டு.

தம் உழைப்பாலும் நேர்மையினாலும் படிப்படியாக உயர்ந்தவர். கப்பல் போக்குவரத்து மந்திரி சபையில் பணியாற்றியவரை அப்பொழுது பிரதமர் ராஜீவுக்கு விசேஷ காரியதரிசியாக இருந்த ஸ்ரீ பி.ஸி. அலெக்ஸாண்டர் கூப்பிட்டனுப்பினார். "உங்களைப் பிரதமருக்கு விசேஷ உதவியாளராக நியமிக்க இருக்கிறோம். நீங்கள் பிரதம மந்திரியைச் சந்தியுங்கள்" என்று சொன்னார்.

வி.எஸ்.வி. பிரதமரைச் சந்திக்கச் சென்றார். இவரைப் பார்த்ததும் ஸ்ரீ ராஜீவ் கைகுலுக்கி அமரச் சொல்லிப் பேசினார். அரை மணி நேர உரையாடலுக்குப்பின் அவர் கூப்பிட்டனுப்பியது எதற்காக என்பதை பிரஸ்தாபித்து, "நீங்கள் லால்பகதூர்ஜியின் அந்தரங்கக் காரியதரிசியாகத் திறமையுடனும் நேர்மையுடனும் பணியாற்றியதை அறிவேன். நீங்கள் எனக்கு விசேஷ உதவியாளராக நியமிக்கவிருக்கப்படுவது எனக்கு மகிழ்ச்சி. நீங்கள் மீண்டும் ஸ்ரீ அலெக்ஸாண்டரைச் சந்தியுங்கள்" என்றார். வி.எஸ்.வி. ஸ்ரீ அலெக்ஸாண்டரைச் சந்தித்து நன்றி கூறச் சென்றார். அதற்குள் ஸ்ரீ ராஜீவ் ஸ்ரீ அலெக்சாண்டருடன் உள் தொலைபேசியில் தனக்கு வி.எஸ்.வி.யைச் சந்தித்தது மகிழ்ச்சி என்றாராம். ஸ்ரீ அலெக்ஸாண்டர் மறுநாளே வி.எஸ்.வி.யை புதுப் பொறுப்பை ஏற்கும்படி செய்தார்.

இதே சமயத்தில் ஸ்ரீ ராஜீவை ஏதோ கற்றுக்குட்டி என்று நினைத்து ஸ்ரீ பொடேடார், ஸ்ரீ சதிஷ் சர்மா போன்ற அதிகாரிகள் அவருக்கு 'ஆலோசனை' சொல்வதற்குத் தயாராக இருந்தார்கள். அவரும் ஒன்றும் தெரியாதவர்போல் நடந்து கொண்டார். இந்தத் தான்தோன்றி 'ஆலோசகர்கள்' அதிகாரிகள். ஆனால் ஸ்ரீ அருண் நேருவின் கதை வேறு. அவர் நேரு குடும்பத்தில் ஒருவர். ஆகவே அவருடைய தொடர்பு அரசியல் தொடர்பு. ஸ்ரீ அருண் ஸிங் கல்கத்தா கம்பெனியில் பெரிய நிர்வாகியாக இருந்தவர். அவர் தம் திறமைக்காகப் பொறுக்கப்பட்டவர். இவர்களெல்லாம் தாங்கள் அரசாட்சியில் இன்றியமையாத அம்சங்கள் என்று எண்ணி வந்தவர்கள். ஆனால் அவர்கள் யார்? அவர்களுக்கு எவ்வளவு தூரம் செல்வாக்கு? என்பது இப்பொழுது விளங்கி வருகிறது. ஸ்ரீ பொடேடார், ஸ்ரீ சர்மா இருவருக்கும் அவர்களுடைய இடம் எது என்று காட்டப்பட்டுவிட்டது. ஸ்ரீ அருண் ஸிங், ஸ்ரீ அருண் நேரு ஆகியோரும் ஸ்ரீ ராஜீவின் தயவில் வளைய வருகிறோம் என்பதைப் புரிந்து கொண்டுவிட்டார்கள்.

"ஸ்ரீ ராஜீவ் வெகு சிக்கலான அரசியல் பிரச்னைகளைத் தவிர மற்ற நிர்வாக விஷயங்களில் தம் சுய சிந்தனையை நம்பித்தான் இயங்குகிறார். முடிவுகள் அவருடையவை" என்றார் ஸ்ரீ வேங்கடராமன் ஒரு கேள்விக்கு பதில் அளிக்கையில்.

யார் அரசியலில் நெருங்கிய 'ஆலோசகர்'? நிதி மந்திரி ஸ்ரீ வி.பி. ஸிங், அவருக்குத் தினசரி நிர்வாகத்தில் அவ்வப்பொழுது யோசனை கூறுகிறார். அவருக்கும் தம் மந்திரி சபையில் வெகு ஆழ்ந்த முடிவெடுக்கச் சுதந்திரம் இருக்கிறது.

அவருக்கு அடுத்தபடி ஸ்ரீ ராஜீவின் ஆப்தர் ஸ்ரீ என். திவாரி என்று நினைப்பார்கள். உண்மையில் இவருக்கு அதிகச் செல்வாக்கு இருக்கிறது. ஆனால் வெளிநாட்டு விஷயங்கள், உள் நாட்டுச் சிக்கல்களில் நரசிம்மராவின் அபிப்ராயத்தையே பிரதமர் விரும்புகிறார். வெளிவிவகாரம், ருஷ்ய—அமெரிக்க, ஐ. நா. சம்பந்தப்பட்ட சாணக்கியங்களில் ஸ்ரீ ராவ் அந்தரங்க ஆலோசகர்.

துவக்கத்தில் ஸ்ரீ ராஜீவ் 'வெளி' புள்ளிகளைச் சந்திக்க மறுத்து வந்தார். இப்பொழுது ஒருவாறு யார் எவர் என்பதை எடை போட்டுவிட்டதால் அவர் மாறி வருகிறார். சில வகை நபர்களைச் சந்தித்தால் உண்மையான விஷயங்கள் வெளி வரும் என்று நம்புகிறார்.

விஞ்ஞானிகள், கம்ப்யூட்டர் நிபுணர்கள் போன்றவர்களைச் சந்திக்க விரும்புகிறார். அவருடைய நோக்கில் இந்தியா மேம்பாடு அடைந்து வரும் நாடு என்பதால் மேலை நாடுகளின் அடிச் சுவடுகளைப் பின்பற்ற வேண்டிய அவசியம் இல்லை என்று சொல்லி வருகிறார். இன்றைய உலகில் கற்காலத்து உத்திகளும் ஆயுதங்களும் யாருக்குத் தேவை? இந்தியா 21ம் நூற்றாண்டுக்குள் . இப்



பொழுதே நுழைய வேண்டும் என்று அவர் வற்புறுத்துவதின் நோக்கம் என்னவென்றால், பல துறைகளில் கம்ப்யூட்டர்களைப் புகுத்தியதால் தில்லு முல்லு, ஊழல், லஞ்சம், மோசடிகள் குறைந்து வருகின்றன. இவை இந்தியன் ஏர்லைன்ஸ், ஏர் இந்தியா விமான முன் பதிவு சம்பந்தப்பட்டவை. ரயில்வேயிலும் இந்த கம்ப்யூட்டர் யுகம் தேவை. பிறகு பாங்கு கணக்குகள், ஊழியர்கள் நல நிதி போன்ற ஆயிரக்கணக்கான துறைகளிலும் புகுத்த வேண்டும். தொழிற்சாலை உற்பத்தித் திட்டம், உற்பத்தி சரக்கு, ஸ்டாக் கட்டுப்பாடு ஆகியவை அனைத்தும் கம்ப்யூட்டரின் ஆதிக்கத்துக்குள் கொண்டு வரப்பட வேண்டும். வேதம் உள்ளளவும், வேத கீதம் உள்ளளவும் 'ஏழை ஏழை' என்ற அரசியல்வாதிகளின் ஓலம் ஒழிய வேண்டும். இது ஸ்ரீ ராஜீவின் சிந்தனை.

அரசியலில், அதுவும் நாட்டில் எல்லாவற்றிற்கும் உயர்ந்த பதவியில் அமர்ந்தது ஸ்ரீ ராஜீவின் குடும்ப வாழ்க்கையைப் பாதிக்கிறதா என்று ஒரு கேள்வி. மீசைக்கும் ஆசை, கூழுக்கும் ஆசை என்றால் எப்படி சாத்தியம்? கூழ் ஆசையை விட முடியாது என்றால் மீசையைச் சிரைக்க வேண்டும். அல்லது மீசை ஆசை அதிகம் என்றால் கூழ் தொலையட்டும் என்று கையைக் கழுவ வேண்டும். ஸ்ரீ ராஜீவ் கூழை விட்டுவிட்டார். அவர் தன் மனைவி, குழந்தைகளை மிகவும் நேசிப்பவர். ஆனால் பிரதமரான பிறகு ஸ்ரீமதி ஸோனியா கூட அநேகமாகக் காலை ஆகாரம் சாப்பிடும் சமயம்தான் அவரைப் பார்க்கிறார். குழந்தைகளை அவகாசம் கிடைக்கும்பொழுது பார்ப்பதுதான்.



அலுவலகத்துக்கு, குறிப்பாக நாடாளுமன்றத்தில் தம் அலுவலகத்துக்கும், சபைக்கும் மாறி, மாறிப் போவதால் மதிய உணவை மறந்துவிடுவார். அல்லது அவகாசம் இல்லாமல் போய்விடுமாம். அப்பொழுது பால் போன்றதை அருந்திச் சென்று விடுவாராம். விருந்து என்று இருந்தாலும் குருவி கொத்துவதுபோல்தான் வெகு குறைவாகச் சாப்பிடுவார் என்றார் ஸ்ரீ வெங்கடராமன். 'மதிய உணவு சாப்பிட பத்து நிமிடங்களாவது ஒதுக்குங்கள்' என்று சொன்னால், 'மனிதன் உயிர் வாழ்வதற்குத்-தலையணைக்குப் பஞ்சு அடைப்பது போல் அடைக்கத் தேவையில்லை' என்பாராம்.

அவருடைய ஒரு வருட பதவிக் காலத்தைச் சீர் தூக்கினால் தெளிவாவது, வெகு சங்கோஜியாக இருந்தவர் இன்று துரிதமாக மாறி வருகிறார். அவருடைய தாயாருடைய செயல்பாட்டுமுறை காற்றில் பறந்துவிட்டது. நல்ல காலமாக பல சகுனிகள் அவரைச் சூழ்ந்திருந்தும் நேர்மைக்குத்தான் அவர் முக்கியத்துவம் கொடுக்கிறார். மத்திய—மாநில உறவில்கூட அவர் போக்கு சரியானது. கர்நாடகத்தில் ஸ்ரீ ஹெக்டே தன் பதவியைத் துறந்து /தேர்தலுக்குத் தயாரான பொழுது அவர் ஸ்ரீ ஹெக்டேயைத் தொடர்ந்து அரசை நடத்தும்படி சொன்னாரே தவிர, யாராவது தன் கட்சிக் காக்கை மூக்கன் ஒருத்தனை அங்கு உட்கார்த்தவில்லை.

அவர் அரசு, செயல்பாட்டுக்கு அரியாசனம் கொடுக்கிறது என்பது உண்மை. தண்ட மந்திரிகள் யாராக இருந்தாலும் அவர்களுக்கு அஷ்டமத்துச் சனிதான். ஒவ்வொரு மந்திரி சபையின் செயல்பாடும் எடை போடப்படுகிறது. அக்கூட்டங்களின் நிகழ்ச்சிகள் கம்ப்யூட்டரால் பதிவு செய்யப்படுகின்றன. அடுத்த கூட்டத்தில் கம்ப்யூட்டர் பேசும். என்ன வாக்குறுதிகள் கொடுக்கப்பட்டன, எவ்வளவு தூரம் அவை நிறைவேற்றப்பட்டன, என்பதை யாரும் ஒளிக்க முடியாதே! ஆகையால் காரியதரிசி முதல் குமாஸ்தாவரை எல்லோரும் இன்று நடுங்குகிறார்கள் என்றால் ஆச்சரியம் என்ன? மனிதர்கள் பொய் சொல்வார்கள். இயந்திரங்கள் பொய் சொல்லாதே!

இவ்வளவு கண்டிப்புடன் செயல்படும் ஸ்ரீ ராஜீவிடம் மற்றொரு அரிய குணம் என்னவென்றால் அவர் எல்லா அதிகாரிகளிடமும் காட்டும் பரிவு. அதிகார பூர்வக் கூட்டங்



களில் எல்லோரையும் 'மிஸ்டர்' போட்டு அழைப்பார். கொஞ்சம் தெரிந்த பிறகு மிஸ்டரை விட்டு விடுவார். ஸ்ரீ ராஜீவுடைய தாத்தா ஸ்ரீ ஜவாஹர்லாலுக்குத் திறம் குறைந்தவரிடம் கோபம் வரும். ஆனல் உடனேயே தட்டிக் கொடுப்பார். ஸ்ரீமதி காந்தி வெகு சிலருடன்தான் முகம் கொடுத்துப் பேசுவார். பிடிக்காதவர்களைத் தூக்கி எறிந்துவிடுவார். இந்த அம்சத்தில் ஸ்ரீ ராஜீவ் வெகு அருமையானவர் என்று உயர் மட்டத்திலிருந்து உப காரியதரிசிகள்வரை அனே வரும் சொல்கிருர்கள்.

துவக்கத்தில் ஐந்து நிமிடங்களுக்கு மேல் பேசியறியாத ராஜீவ், இப்பொழுதெல்லாம் தெம்புடன் பேசுகிருர். ஐ. நா. சபைக் கூட்டத்திலிருந்து காமன்வெல்த் உச்சமட்ட மாநாடுவரை அவர் சாமர்த்தியமாகச் சமாளித்துள்ளார். அதிகாரிகள் வெளிநாட்டுக் கூட்டங்களுக்கான பேச்சுக்களைத் தயார் செய்து கொடுத்துவிடுகிருர்கள் என்ருலும் அதைத் தொடர்ந்து நிகழும் வாதப் பிரதிவாதங்களை அவர்தானே சமாளிக்க வேண்டும்!

ஒரு வருடத்தில் ஸ்ரீ ராஜீவ் காட்டியுள்ள அக்கறையும் போடு போடு என்று நாட்டில் உண்டாக்கி வரும் உற்சாகமும் மெச்சத்தக்கவை. அவருக்கு எதிர்க் கட்சிகளும் காங்கிரஸ் அல்லாத அரசுகளும் ஒத்துழைப்புக் கொடுக்கின்றன. இதுவரை எடுப்பார் கைப் பிள்ளையாக இல்லாமல் செயல்பட்டுவிட்டார். டெலிவிஷன் செய்தி துவங்கியதும், 'இன்று ஸ்ரீ ராஜீவ் காந்தி.....' என்று அறுப்பதை நிறுத்த வேண்டும். இம்மாதிரிதான் ஸ்ரீமதி காந்தியின் உருவத்தைப் பார்க்கும் பொழுது 'ஆண்டவா!' என்று சொல்லும் அளவுக்குச் சலிப்புத் தட்ட ஆரம்பித்து விட்டது. அவரே இது பற்றி எச்சரித்துள்ளார். மீண்டும் ஒரு முறை கடிந்து கொள்ள வேண்டும். அமெரிக்காவில் மறைமுக விளம்பரம் என்ற அடிப்படையில் முக்கிய நிகழ்ச்சிகள் நடக்கும். அது வெகு ஆழ்ந்த முறையில் பார்ப்பவர்களின் மனத்தில் பதியும். ஆனல் எரிச்சலை உண்டாக்காது.

—கே. ஸ்ரீனிவாஸன்.

அட்டை வண்ணப்படம்: யோகா

# "கல்கி ஆசிரியருக்குப் புத்தி எப்படிப் போயிற்று?"



கல்கி பத்திரிகையில் வாசகர் கடிதங்களையெல்லாம் படித்தேன். ஒரு வாசகர் கடிதத்தில்,

மிருதங்கம் சத்தம் போடுகிறது;
கஞ்சிரா சத்தம் போடுகிறது;
கடம் சத்தம் போடுகிறது;

என்று கிண்டலாய் எழுதியிருக்கிறார். அந்தக் கிண்டலுக்கு ஒரு பரிசு கொடுத்திருக்கிறார்கள். அவர்தான் எழுதினார் என்றால் நம் ஆசிரியருக்குப் புத்தி எப்படிப் போயிற்று? அந்த வாசகரின் கிண்டலுக்குத்தான் பரிசு கொடுத்தார் என்றால், இப்போது வாரப் பத்திரிகைகளில் 'கல்கி'க்கே இசை பற்றிய உணர்வு இல்லை என்று பார்த்தால், வருத்தமாக இருக்கிறது. மிருதங்கம், கஞ்சிரா, தனி ஆவர்த்தனம் எல்லாவற்றையும் கேலி செய்து, கிண்டல் செய்வது விரும்பத்தகாதது. எல்லாவற்றையும் இப்படிப் பொத்தாம் பொதுவில் கண்டிப்பது தவறானது. இசைவிழா மலர் போடுகிற வாரப்பத்திரிகை இப்படிச் செய்யலாமா? இவை என் எண்ணங்கள். இவை தவறாக இருக்கலாம். முன்பு சபாநாயகராக இருந்தபோது தீர்ப்பு வழங்கிக் கொண்டிருந்தேன். இப்போது அமைச்சர். அதனால் என் கருத்தை மட்டுமே இங்கே தெரிவிக்கிறேன்.

— மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் துவக்கவிழா உரையில்:

அமைச்சர் க. ராஜாராம்.

## "இசை பற்றிய உணர்வு கல்கிக்கு நிறையவே இருக்கிறது!"

அமைச்சர் ராஜாராம், பணிவன்புடன் அவருக்குச் சில விஷயங்களைத் தெளிவுபடுத்த வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு நம்மை உள்ளாக்கியிருக்கிறார்.

பொதுவாகக் கர்நாடக சங்கீதத்துக்கு ரசிகர்கள் குறைந்து வருவதாக ஒரு கவலை நிலவுகிறது. இது ஏன் என்பதைத் தெரிந்து கொள்ளும் நோக்கில்தான், 'கர்நாடக சங்கீதத்தை நீங்கள் ஏன் விரும்பிக் கேட்கிறீர்கள் அல்லது கேட்பதில்லை' என்ற வினா எழுப்பி, 'கர்நாடக இசையும் நானும்' என்ற தலைப்பில் கருத்துக்களை எழுதுமாறு வாசகர்களை வேண்டினோம். அவர்கள் இருவிதமாகவும் எழுதியுள்ளார்கள். 'கர்நாடக இசை நமக்கும் இறைவனுக்கும் உள்ள இடைவெளியைக் குறைக்கிறது'; 'ராக தேவதைகளைத் தரிசிக்கிறேன்'; 'மனம் லேசாகிக் குழப்பம் தீர்கிறது'; 'பார்வை விசாலமாகி உலகமே அழகாக உருவெடுத்து வாழ்க்கையே பசுமையாகிறது...' என்றெல்லாம் கர்நாடக சங்கீதத்தின் மேன்மையை அதன் ரசிகர்கள் பரவசத்தோடு எழுதியுள்ளனர். இவையெல்லாம் அமைச்சரின் கண்களில் படவில்லையோ, அல்லது கண்டும் காணாதது போல் இருந்தாரோ, நமக்குத் தெரியாது.

இதற்கு மறுபுறமாகச் சில வாசகர்கள் கர்நாடக இசைக் கச்சேரிகளில் தாங்கள் காணும் குறைகளையும் எழுதியுள்ளனர். கச்சேரிகள் நாதமாக இல்லாமல் சத்தமாக இருக்கிறதென்றும் கருதி சேராததே பெரிய தலைவேதனையளிக்கிறதென்றும் தியாகையர் நினைத்த 'சுகம்' மிருதங்கச் சேர்க்கையில் இல்லை என்றும் தங்கள் கருத்துக்களைக் கூறியுள்ளார்கள். இப்படியெல்லாம் சில பல கச்சேரிகள் அமைகின்றன என்பதையும் மறுக்க முடியாது; அதை வெளியிட வாசகர்களுக்கு உள்ள உரிமையையும் மறுக்க இயலாது. எனவே அந்தந்த வாசகர்கள் சில கச்சேரிகளைக் கேட்டபோது, தங்களுக்கு ஏற்பட்ட பாதிப்பை எழுதியதில் என்ன தவறு? இந்த வாசகர் பகுதியை விருப்பு வெறுப்பின்றிக் கருத்தூன்றிப் படிக்கும் இசைக் கலைஞர்கள் நிச்சயமாகப் பயனடைய முடியும்; கச்சேரிகள் இன்னும் சிறப்பாக அமையவும் ரசிகர்களை ஈர்க்கவும் எவ்வாறு நாம் பாடுபட வேண்டும் என்பதை உணர முடியும் என்பதே நம் கருத்து.

பரிசளித்த விஷயம் பற்றிக் குறிப்பிட்டுள்ளார் அமைச்சர். பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட எல்லாக் கருத்துக்களும் சம அளவில் சன்மானம் பெறுகின்றன என்றும் சிறப்புப் பரிசு விழுவது குலுக்கல் முறையில் தான் என்பதையும் அவர் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறோம். ஆசிரியரே ஒரு கருத்தை ஸூட்கேஸ் பரிசுக்குரியது என்று தேர்ந்தெடுப்பதில்லை. எனவே ஆசிரியரின் புத்தி எப்படிப் போயிற்று என்ற பிரச்னையே இதில் எழவில்லை.

— ஆசிரியர்.

## தலைவலி பலவகை உண்டு சிகிச்சை ஒன்றே ஒன்று!




# சக்தி வாய்ந்த, நம்பகமான

# அனாஸின்

உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி-நிவாரணி மருந்து, மிக அதிக அளவில் கொண்டது அனாஸின். எனவே தலைவலியில் இருந்து துரித நிவாரணம் பெற அனாஸின் ஒன்றே போதும்.

தலைவலியைத் தவிரவும், ஜலதோஷம், ஃப்ளு, முதுகு வலி, தசை வலி மற்றும் பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது.

பாதுகாப்பான
ஃபாயில் உறையில்



சொல்லப்போனால் டாக்டரின் மருந்துதான்

## அனாஸின்

இந்தியாவின் நம்பர் 1 வலிநிவாரணி மருந்து



1986 ஜனவரி 5
மலர் 44 இதழ் 23
குரோதன மார்கழி 21

கல்கி



# வெற்றி பெறும் (V.P.) சிங்!

'ஜனநாயக சோஷலிஸமே கதி; பர்மிட் லைசென்ஸே விதி; அரசுத் துறையே ருசி' என்ற பழைய பல்லவியையே பாடிக் கொண்டிராமல் புதிய இசை வடிவங்களைப் பரீட்சித்துப் பார்க்கவும், சுதந்திரப் பொருளாதாரக் கானங்களை ஆனந்தமாகப் பாடவும் நிதி அமைச்சருக்குச் சுதந்திரம் அளித்துள்ள பிரதமர் பாராட்டுக்குரியவராகிறார். அடுத்தடுத்து இரு வாரங்களில் பிரதமரையும் மத்திய நிதி அமைச்சர் வி. பி. சிங்கையும் வாழ்த்துவதற்கு வாய்ப்புக் கிடைத்ததற்காக மகிழ்கிறோம்.

சென்ற வாரத் தலையங்கம் அச்சான மை உலர்வதற்குள்ளே மேலும் சில சலுகைகளை அறிவித்துள்ளார் நிதி அமைச்சர். தொழில் துறையில் பல இனங்களில் இனி லைசென்ஸ் பெறவே அவசியமில்லை அல்லது லைசென்ஸ் பெறுவது எளிதாக்கப்பட்டுள்ளது. தவிர அந்நியச் செலாவணி தொடர்பாக இருந்த பல கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டுள்ளன. அயல்நாடுகளில் குடியேறியுள்ள இந்தியர்கள் இந்தியாவில் முதலீடு செய்வதற்கான விதிமுறைகள் எளிதாக்கப்பட்டுள்ளன; கவர்ச்சிகரமான திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன.

இவையெல்லாம் பொருளாதார ரீதியில் இன்றைய மத்திய அரசின் பரந்த மனப்பான்மையையும் தெளிந்த சிந்தனையையும் உணர்த்துவன. வெற்று அரசியல் கோஷங்கள் பொருளாதார முன்னேற்றத்தைப் பாதிக்க அனுமதிக்கக் கூடாது என்ற உறுதி புலப்படுகிறது. "ஐயய்யோ, சோஷலிஸத்தின் கதி என்ன ஆவது? இ. காங்கிரஸ் இப்படிப் 'பிற்போக்கு' சக்தியாகி விட்டதே!" என்று புலம்புகிறவர்கள் இன்றையப் பொருளாதார உலகின் யதார்த்த நிலைகளை உணராமல் உளறுகிறவர்களே! இன்று செஞ்சீனாவே தனது கம்யூனிஸச் சித்தாந்தங்களைப் பல அம்சங்களில் ஒதுக்கி வைத்துவிட்டுச் செயல்படுகிறது. முதலாளித்துவ அமெரிக்காவுடனேயே வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்துகொண்டு துடிப்புடன் முன்னேறி வருகிறது.

சலுகைகளைக் கொடுப்பதுடன் கண்டிப்பும் காட்டி வருகிறார் நிதி அமைச்சர். சில பண முதலைகள் கைதானதைக் கண்டு வெகுண்ட இதர பண மூட்டைகள் ஆட்சேபணை எழுப்பிய போது நிதி அமைச்சர், "சட்டத்துக்கு முன் அனைவரும் சமம்" என்று பட்டுக் கத்தரித்த மாதிரி கூறி விட்டார். "அரசு வகுத்துள்ள விதி முறைகள் தொழில் வியாபார முன்னேற்றத்துக்கு இடையூறாக இருந்தால் அதை எங்கள் கவனத்துக்குக் கொண்டு வந்து திருத்த முயல வேண்டுமே தவிர அந்த விதிமுறைகளை மீறக் கூடாது; அப்படி மீறுவதை எங்களால் மன்னிக்கவும் முடியாது!"

இத்தனை அழகாகப் பேசியதற்காக வி. பி. சிங்கைத் தட்டிக் கொடுக்கலாம் என்றால் இதையடுத்து அவர் கூறிய இன்னொரு விஷயத்துக்காக அவரைத் தலை மீதே தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடலாம்! நம் நாட்டில் அங்கிங்கெனாதபடி எங்கும் பரவியுள்ள ஒழுக்கக்கேடுக்கும் தார்மீகச் சீர்குலைவுக்கும் முழு முதற் காரணம் தேர்தலில் பணபலம் விளையாடுவதுதான் என்பதை நன்றாக உணர்ந்து பேசியுள்ளார் வி. பி. சிங். தேர்தலையொட்டி கட்சிக்குக் கம்பெனிகள் நன்கொடை என்பதில் ஆரம்பித்து வரிசையாகக் கறுப்புப்பண உற்பத்தி, வரி ஏய்ப்பு, வேண்டியவருக்குச் சலுகை, லஞ்ச ஊழல் லாவண்யங்கள், பொருளாதாரச் சீர்குலைவு என்று கேடுகள் சங்கிலித் தொடராக வளர்கின்றன. இவை தலைவர்களிடம் மக்கள் நம்பிக்கை இழக்கக் காரணமாகி மக்களையும் தான்தோன்றித் தனமாக நடந்து கொள்ளத் தூண்டுகின்றன. எனவே கப்பும் கிளையுமாகத் தழைத்து வளரும் விஷவிருட்சத்தின் ஆணிவேரைக் கெல்லி எறியப் போவதாக நிதி அமைச்சர் கூறியது மிகுந்த மனநிறைவைத் தருகிறது. தேர்தல் முறையை எளிதாக்கிச் செலவினங்களைக் குறைந்தபட்சமாக்கி அந்தச் செலவையும் அரசாங்கமே ஏற்றுக் கொண்டு விடுவதென்ற திட்டம் பரிசீலனையில் உள்ளதாக வி. பி. சிங் தெரிவித்துள்ளார்.

நமது தேசத்தின் மிகப்பெரிய பலம் நமது ஜனநாயகம் என்றால், மிகப் பெரிய பலவீனம், பண பலமும் அதிகார பலமும் தேர்தல் சமயத்தில் புகுந்து விளையாடி, தேர்தலையே அர்த்தமற்றதாகச் செய்துவிடுவதுதான். இந்த பலவீனத்தை ஒழித்து, பலத்தை மட்டும் பாதுகாப்பதில் V.P. சிங் வெற்றி பெறும் சிங்காகத் திகழட்டும்!

> தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
> தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.



# The Never Ending Story

**சி**ன்னவர்களுடன் பெரியவர்களும் சேர்ந்து ரசிக்கும்படி அமைந்திருக்கும் ஓர் ஆங்கிலப் படம்!

சின்னப்பையன் ஒருவன் ஒரு கதைப் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கி அந்தக் கதையுடன் ஐக்கியமாகி, வியர்த்து, பயந்து, சிரித்து, அழுது, கடைசியில் அந்தக் கதை மாந்தர்களுடனேயே தொடர்பு கொள்கிற மாதிரி முடிந்து போகிற கதை.

அந்தப் பையன் படிக்கும் சாகசக் கதையில், 'ஒன்றுமில்லை' எனும் ஒரு பெரும் பயங்கரமான விஷயம் உலகை அழிக்கப் போகிறது. அந்த ஒன்றுமில்லையை அழிக்க வேண்டுமானால் கையில் ஆயுதம் ஏதுமின்றி 'நம்பிக்கை'யின் துணையோடு செல்ல ஒருவன் முன்வர வேண்டும். அப்படி ஒரு பையன் முன்வருகிறான். அப்புறம்...

ஒரு குதிரை மீது பயணம் மேற்கொண்டு அந்தக் குதிரை புதை குழியில் சிக்கி மரணமடைந்து, பிறகு நடக்கத் தொடங்கி எவ்வளவு சிந்துபாத் சாகசங்களைச் செய்கிறான்!

அந்த மாபெரும் ஆமை, அந்த மாபெரும் பாறை தின்னும் மிருகம், பறக்கும் டிராகன், அந்த 'வினோத விஞ்ஞான ஜோடி' என்று ஏராளமான அதீதக் கற்பனைகள்.

அந்த டிராகன் காதுப்பக்கம் அரிப்பதாகச் சொல்வதும், சிறுவன் சொறிந்துவிடுவதும்... அந்தச் சுகத்தில் டிராகன் ஒரு கண்ணை மூடி, வாயைத் திறந்து, 'ஆ' வென்று ஒரு இன்ப முனகலை வெளிப்படுத்தி... ஜோர்தான்.

அப்புறம் ஜலதோஷம் பிடித்த ஆமை. அதன் புயல் போன்ற ஒவ்வொரு தும்மலின் போதும் அந்தச் சிறுவன் சிக்கித் தத்தளிப்பது... வாய்விட்டுச் சிரிக்க வைக்கும் காட்சிகள்.

நம்பிக்கைதான் வாழ்க்கையின் உயிர்நாடி என்னும் தத்துவத்தைமிக அழகாகச் சொல்லியிருக்கிறார்கள்!

—ஜெயமன் மதன்.









மிஸ் சரோஜா அம்மையார் அவர்களுக்கு,

மோகன் எழுதியது.

ஆகா....! நீங்கள் இவ்வளவு பெரிய வஞ்சகியாக இருப்பீர்கள் என்று நான் கனவிலும் கருதவில்லை. நினைவுக் குதிரையைக் கொஞ்சம் பின்னால் (இரண்டு வாரங்களுக்கு மட்டும்) விரட்டிப் பாருங்கள். 'சிப்பி' தியேட்டர் வாசலில் நீங்கள்; உங்களுடன் ஒல்லியாய் ஒரு பெண் (உங்கள் தோழியா?) பணம் வைத்திருந்த மணி பர்ஸ் வீட்டில். (ரிசர்வ் செய்தசினிமாடிக்கெட்டை மட்டும் எப்படி மறக்காமல் எடுத்து வந்தீர்கள்?) ஆட்டோ டிரைவர் துச்சாதனப் பார்வை பார்க்க; நீங்கள் பத்து விரலிலும் இருபது சொடுக்கு எடுக்க, (உங்கள் தோழியை நான் கவனிக்காததால், அவள் எத்தனை சொடுக்கு எடுத்தாள் என்பதைக் கூற இயலவில்லை) ஆபத்பாந்தனாக— ஆதிமூலமாக நான் பத்து ரூபாயைக் கை மாற்றாகத் தந்து (கவனிக்க: கை மாற்றாகத்தான்) உங்களை — உங்கள் மானத்தைக் காப்பாற்றினேன் (அப்பாடி.....!)

அதற்குள் மறந்தா போய்விட்டது? ஏதோ, உடனே திருப்பித் தந்து விடுவது போல, என் முகவரியை வேறு வாங்கிக் கொண்டீர்கள். ஆனால் அந்தோ....! ரொக்கப் பணம் பத்து ரூபாய் இதுநாள்வரை வந்து சேரவில்லை.

இது சரியில்லை; நேர்மையில்லை; நீதியில்லை; நியாயமில்லை என்பதை இது கடிதம் கண்ட பிறகாவது உணர்ந்து, பத்து ரூபாய் ஐம்பது பைசா (கவர் எப்படி? நன்றாக இருக்கிறதா? ஐந்து பைசா மிச்சம் பிடிப்பதற்காக, சிரமப்பட்டு, ஆஃபீஸ் டைமில் ஐயாவே தயாரித்தது.) அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். எம். ஓ. அனுப்பினால் நலம்.

டி.எம்.ஓ. விரும்பத்தக்கது.

பி.கு: தம்பி, கிம்பி இருக்கிறானா? இருந்தால் அவன் மூலம் அனுப்பவும். எம். ஓ. செலவு மிச்சம்.

இப்படிக்கு.
ஏழை டைப்பிஸ்ட் மோகன்.

மிஸ்டர்மோகன் அப்பையார்(பழிக்குப்பழி!)
அவர்களுக்கு,

'டைப்பிஸ்ட்' சரோஜா எழுதியது. என்னைப் பார்த்தால் என்ன அம்மையார் மாதிரியா தெரிகிறது? (வருகிற தை மாசம் ஆறும் தேதியோடுதான் பத்தொன்பது வயது முடிகிறது.) அது பற்றி பிறகு பேசிக் கொள்கிறேன். விஷயத்திற்கு வருகிறேன்.

ஐயா.... உம்முடைய திமிரான கடிதம் கண்டேன்; கோபம் கொண்டேன். ஏதோ, லட்சக் கணக்கில் கொடுத்துவிட்டது போலவும், அதை நான் ஏமாற்றி வாயில் போட்டுக் கொண்டது போலவும், 'வஞ்சகி' போன்ற மிகவும் அக்கிரமமான வார்த்தைகளைப் பிரயோகித்திருக்கிறீர்கள்.

சமயத்தில் உதவினீர்கள் என்பதென்னவோ உண்மை; நிஜம். சத்தியம். ஆட்டோ டிரைவர் துச்சாதனப் பார்வை பார்க்க; நான் சொடக்கு எடுத்துக் கொண்டே விழிக்க; ஆபத்பாந்தவனாய் ஆதி மூலமாய் வந்த வள்ளலே!

எங்கள் கூடவே(நாகரீகம் கருதி 'பல்லிளித்துக் கொண்டே' என்பதைச் சேர்க்காமல் விடுகிறேன்) வந்து ஐந்து ரூபாய் டிக்கெட்டில் (அதுவும் என் பக்கத்தில் அமர்ந்து) சினிமாப் பார்த்தது மறந்தா போய்விட்டது? அந்த டிக்கெட் என்ன, உங்கள் அப்பன் வீட்டுக் காசில் வாங்கியதாக நினைப்பா? தெரியாமல்தான் கேட்கிறேன். அந்த டிக்கெட்டை 'பிளாக்'கில் விற்றிருந்தால் சுத்தமாக எட்டு ரூபாய்க்குப் போயிருக்கும். 'அசலை'யும் விட்டுக் கொடுத்து, மூன்று ரூபாய் லாபத்தையும் விட்டுக் கொடுத்து, ஆக மொத்தத்தில் எட்டு ரூபாய் நஷ்டப்பட்டிருக்கிறேன். உங்கள் கணக்குப்படியே வைத்துக் கொண்டாலும், பாக்கி இரண்டு ரூபாய்தான் தர வேண்டும்.

அது ஒருபுறம் கிடக்க, தபால் செலவு ஐம்பது பைசாவையும் சேர்த்து பத்து ரூபாய் ஐம்பது பைசா என்று எழுதி இருக்கிறீர்கள். கவரை ஒட்டிய உங்களுக்கு (பரவாயில்லையே, கவர் நன்றாகவே இருந்தது. 'கவர்' பண்ணுவதில் கெட்டிக்காரர்தான்!) தபால் தலை ஒட்ட வேண்டும் என்பது மட்டும் மறந்து போய் விட்டதாக்கும்? 'டியூ' ஒரு ரூபாய் கொடுத்துக் கடிதத்தை வாங்கினேன். ஆக, உங்களுக்குச் சேர வேண்டிய பாக்கி, என் கணக்குப்படி ஒரு ரூபாய்தான். அதில் நாற்பது பைசா எம். ஓ. செலவு போக, பாக்கி அறுபது பைசாவை அனுப்பி வைக்கவா?

உடன் பதில் எழுதவும்.

இப்படிக்கு,
'லேடி டைப்பிஸ்ட்' சரோஜா.

(பி.கு.: எனக்கு தம்பியும் இல்லை, கிம்பியும் இல்லை. இந்தத் தடவையாவது தபால் தலை ஒட்டி போஸ்ட் செய்யவும்.)



அனுராதா கட்டபொம்மன்

# அடி வஞ்சகியே! என் ஸகியே!



''ஒரு வழக்கில் கைதாகி இருந்தாரே அந்தச் சினிமா புரொட்யூஸர் எப்போ ரிலீஸ் ஆனார்?''

''தீபாவளிக்கு!''

— கீழை அ. கதிர்வேல்.

சர்வர்: ''ரொம்பப் புழுக்கமா இருக்கு! ஃபேன் போடவா சார்?''

சாப்பிடுபவர்: ''வேண்டாம்பா! இட்லி பறந்து போயிடுமோன்னு பயமா இருக்கு!''

— ஆர். அரிகோபி.



**மி**ஸ் சரோஜா,

வீண் அபாண்டம் சுமத்திவிட்டீர்கள். நானா தபால் தலை ஒட்டாமல் போட்டேன்? கிடையாது; கிடையவே கிடையாது! என் எச்சில் நாக்கு மீது சத்தியமாகத் தபால் தலை ஒட்டியது நிஜம்; நிஜம்! நிற்க.

நீங்கள் வைத்திருந்த சினிமா டிக்கெட்டை (நீங்கள் எதிர்பார்த்து, வராமல் தப்பிய தோழி நம்பர் இரண்டின் டிக்கெட்) நானாக இருக்கவும் ஓசியில் வாங்கிக் கொண்டேன். அதுவும், நீங்கள் மிகவும் வற்புறுத்திய பிறகு, உங்கள் மனம் நோகக் கூடாதே என்பதற்காக (எனக்கு ரொம்பவும் இளகிய மனசு) அந்த டிக்கெட்டை விற்க நாதியில்லாமல்தான் நீங்களும் 'அதை' என் தலையில் கட்டிவிட்டீர்கள். நிலைமை இப்படி இருக்க, அந்தப் பாடாவதிப் படத்தைப் பார்க்க, ஏதோ, கும்பல் அலைமோதியது போலவும், நீங்கள் பெரிய மனசு பண்ணி டிக்கெட்டை எனக்குத் 'தாரை வார்த்தது' போலவும், அசகாயத்தனமான கற்பனையுடன் எழுதியிருக்கிறீர்கள். பரவாயில்லை; மன்னித்து விடுகிறேன்; மறந்து விடுகிறேன்.

ஏதோ, நீங்கள் என் ஜாதியாய் (டைப்பிஸ்ட் ஜாதி)ப் போய்விட்டீர்களே என்ற ஒரே காரணத்துக்காக, இது விஷயத்தை இதோடு விட்டேன். கடிதம் கண்டவுடன், ஏதொரு தாமதமும்செய்யாமல் பத்துரூபாயை(தபால் எழவெல்லாம்.... ஸாரி செலவெல்லாம் வேண்டாம்) அனுப்பித் தொலைக்கவும்.

கோபமுடன்,
மோகன்.

**மி**ஸ்டர் கோபம்.... சாரி..... மோகன்,

அறுபது பைசாவை அனுப்பலாமென்றிருந்தேன். என் நல்ல எண்ணத்தில் பாவம், நீங்களாகவே மண் அள்ளிப் போட்டுவிட்டீர்கள். உங்கள் ஆர்ப்பாட்ட அமர்க்களத்தைப் பார்க்கும்போது, மேற்படி தொகையையும் அனுப்பாமல் இருப்பதே சாலச் சிறந்தது என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். தங்களுக்கு எந்த பாக்கியும் அனுப்ப இயலாமைக்கு வருந்துகிறேன்.

வருத்தத்துடன்,
சரோஜா.

**சே**.... ரோஜா!

ஏமாற்றுக்காரியே, சதிகாரியே, பழிகாரியே, 'சேலை கட்டிய மாதரை நம்ப வேண்டாம்' என்று நன்றாகத்தான் சொல்லி வைத்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள். (அனுபவசாலிகள்..... ஹூம்.....) இருந்தும், அனுபவமின்மையால் ஏமாந்து தொலைத்துவிட்டேன். இருந்தாலும் கடைசியாக உங்களுக்கு ஓர் எச்சரிக்கை! மரியாதையாகப் பத்து ரூபாயைத் திருப்பிக் கொடுத்துவிடுங்கள். இல்லாவிடில்.... என்ன நடக்குமென்று எனக்கே தெரியாது (நிஜமாகத்தான்!)

நீங்கள் மாலையில் ஆஃபீஸ் முடிந்து ஆளரவமற்ற பாதை வழியாகத்தான் வர வேண்டும் என்பதை மறந்துவிட வேண்டாம். ஹஹ்ஹஹ்ஹா.....!

இறுதியாக,
மோகன்.

**ஹஹ**ஹ்ஹஹ்ஹா.... மோகனுக்கு,

தங்கள் மிரட்டல் கடிதம் கண்டேன். நடுங்கவில்லை. நான் பாரதி கண்ட பெண்ணாக்கும்! உங்கள் தகர டப்பா உருட்டல் மிரட்டல்களுக்குப் பயந்துவிடப் போவதில்லை. உங்கள் கடிதம் கண்ட பிறகுதான் என் தைரியம் இன்னுமொரு ஐம்பது சதவிகிதம் கூடியிருக்கிறது. ஆஃபீஸ் விட்டு நிதமும் அந்த ஆளரவமற்ற பாதை வழியாகத்தான் போய்க்கொண்டிருக்கிறேன் என்பதை அறியவும்.

உறுதியாக,
சரோஜா.

(பி.கு:) நான் சேலை கட்டிய மாதரில்லை. சல்வார் கமீஸ் போட்ட மாதர் என்

பது பார்த்தால் தெரியவில்லையா? நல்ல 'ஐ' டாக்டரிடம் கண்களைக் காட்டிக் கண்ணாடி மாட்டிக் கொள்ளவும்.

ஏய், சரோஜா!

தூங்கும் புலியை இடறிவிட்டாய்! தேங்கிய அணையை உடைத்துவிட்டாய்! வாங்கிய கடனைத் திருப்பித் தராத வஞ்சகியே! பழிக்குப் பழி! அதுவரை எனக்கு இமை இறக்கமில்லை; கண் உறக்கமில்லை! நாளை மறுநாள் சாயங்காலம் (அன்றுதானே சம்பளத் தேதி?) நீ அலுவலகத்திலிருந்து திரும்பும்போது.... ஹஹ்ஹஹ்ஹா.....! உன்னை ஹைஜாக் செய்யப் போகிறேன் (சம்பளப் பணத்தோடு தான்.) அதற்குள் பத்து ரூபாயைத் திருப்பி அனுப்பினால் ஆயிற்று. இல்லாவிடில், பின் விளைவுகளை நீயே அனுபவிக்க வேண்டியது தான்.

கடைசியாக கழிவிரக்கத்துடன்,
மோ GUN

அன்பே மோ GUN!

நேற்றைய நிகழ்ச்சிக்குப் பிறகு எனக்கு உங்கள் மேல் ஒரு 'இது' உண்டாகிவிட்டது. என் நல்ல நேரம், நேற்று மட்டும் நீங்கள் மோ GUN ஆக, விளையாட்டுத் துப்பாக்கியுடன் வந்திராவிட்டால்..... ஐயகோ.... எண்ணவும் நெஞ்சு நடுங்குகிறதே!

அந்த ரௌடிகளிடம் சிக்கி என் சம்பளப் பணமும் போயிருக்கும்; அப்புறம், என்... என்.... ம்ஹூம்..... சொல்லமாட்டேன்! அதைத்தான் நீங்கள் காப்பாற்றிவிட்டீர்களே!

இது விஷயத்தைக் கேள்விப்பட்ட என் அப்பா, நாம் இருவரும் ஒரே ஜாதி (டைப்பிஸ்ட் ஜாதி) என்பதால் நம் திருமணத்திற்கும் பச்சைக் கொடி காட்டிவிட்டார். (அப்பா தென்பிராந்திய ரயில்வேயில் கார்டாக இருக்கிறார்.) நம் திருமண விஷயமாக அப்பாவைச் சந்தியுங்களேன், ப்ளீஸ்.....

வெட்கத்துடன்,
சரோஜ்.

டியர் சரோ (ஜ்)!

உன் காதல் கடிதம் கண்டேன்; உவகை கொண்டேன். உனக்கும் ஒரு சந்தோஷ சமாசாரம். உன் விருப்பப்படியே, (என் விருப்பப்படியும்தான்!) நம் திருமண விஷயமாக மாமாவை (உன் அப்பாவைத்தான்!) சந்தித்ததின் விளைவு, நம் திருமணச் செலவில் பத்து ரூபாய் அதிகமாகச் செலவு செய்வதாக வாக்குக் கொடுத்திருக்கிறார். நீயும் என்னிடம் பட்ட கடன் பத்து ரூபாயைத் திருப்பித் தர வேண்டியதில்லை. சரிதானே? ஆசை முத்தங்களுடன்....

வள்ளல்,
பே(மோ)கன்

---

# 9

அஸ்வத்தின் குரல் கேட்டுவிட்டு விமலா உள்ளேயிருந்து மெள்ள வந்து எட்டிப் பார்த்தாள்.

"பெரியம்மா! எப்படி இருக்கேள் — இப்ப உடம்பு கொஞ்சம் தேவலைதானே... உங்களைப் பார்க்கணும்னு ஆவல் தாங்க முடியாமல் புறப்பட்டு வந்திருக்கேன்..." என்று வரிசைப் பற்கள் தெரியச் சிரித்தான் அவன்.

'தான் வளர்த்த பிள்ளை. கண்ணுக்கு லட்சணமானதொரு இளைஞனாக... எப்படி வளர்ந்து விட்டிருக்கிறான்?' என்று தன்னெதிரே நின்றவனை ஏற இறங்கப் பார்த்துப் பூரித்துப் போனாள் விமலா.

"எனக்கு உடம்பு குணமாகிவிட்டதே. லீவை வீணடித்துக்கொண்டு அவசரமாக வந்தாயா...? ஏதாவது பண்டிகையின் போது ஊருக்கு வருவதற்கு அந்த லீவு உபயோகப்பட்டிருக்குமே...?" என்றாள் விமலா.

"உங்களைப் பார்க்க வருவது பண்டிகைக்கு வருவதற்கு மேலே, பெரியம்மா!" என்று சிரித்தபடி கூறி, அவளது கரங்களைப் பற்றித் தன் கன்னங்களோடு பொருத்திக் கொண்டான்.

"பெரியம்மா! நீங்கள் ரொம்ப இளைச்சுப் போய்விட்டீர்கள்."

"அதனாலேயென்ன? இப்போ என்ன? நாலு நாட்கள் நன்றாகச் சாப்பிட்டால் உடம்பு தேறிவிடும். உட்கார்ந்துகொள்..." என்று முன்னறை போன்ற அந்தச் சிறு பகுதியில் சுவர் ஓரத்தில் கிடந்த ஒரு மோடாவைக் காட்டினாள் விமலா.

"உனக்குக் காப்பி கலந்து கொஞ்சம் எடுத்துண்டு வரேன்" என்று கிளம்பிய பெரியப்பாவைப் பிடித்து இழுத்து அருகில் கிடந்த சாய்வு நாற்காலியில் அமர்த்தினான்.

"சரி! நீ கூட இருந்து எங்களோட சாப்பிட்டுவிட்டுப் போகணும். பத்து மணி சாப்பாட்டுக்காரன் நான் — தெரியுமில்லியோ?" என்றார்.

"உங்களையும் உங்க பழக்கவழக்கங்களையும் அத்தனை சுலபமாக என்னால் மறந்து விட முடியுமா, பெரியப்பா...?"

"உனக்குத் தெரியுமோ? விமலாவை அடுப்பருகே நான் அண்டவிடுவதில்லை. இன்றைக்குப் பார்த்துப் பருப்பு ரசமும்... சுட்ட அப்பளமும் போதும்னு திட்டம் போட்டிருந்தேன்.



# சொர்க்கத்தின் கதவுகள்

## லக்ஷ்மி

''விமலா வெறும் தயிர் சாதம் மட்டும் தான் சாப்பிடுவாள். ' எனக்கு மட்டும் விதரணையா சமைத்துக் கொள்ளப் பொறுமை இல்லை!''

''போதும்பெரியப்பா...உங்களைப்பார்க்க வும் உங்களிடம் பல விஷயங்கள் பேசுவதற் கும்தான் வந்திருக்கேன். நான் விமரிசையாக விருந்து சாப்பிட வரவில்லை!''

''கொஞ்ச நேரம் இங்கே இருப்பே இல் லையா?'' என்று கேட்டார் அவர்.

''இருட்டின பின்னுடிதான் வீடு திரும்பு கிறதா உத்தேசம். எனக்குப்பேச வேண்டியது ஏகப்பட்டது இருக்கு!'' என்றான் அஸ்வத்.

''உங்க வீட்டிலே உனக்குத் தனியா ஒரு அறையை ஒதுக்கிவெச்சு... கட்டில் பீரோன்னு வசதி செஞ்சு வச்சிருக்கா உங்கம்மா. இங்கே நீ பாயில் படுத்துக் கொண்டுதான் கொஞ்ச நேரம் ஓய்வு எடுத்துக் கொள்ள முடி யும்...!''

''பெரியப்பா!, பாயில் படுத்து வளர்ந்த குழந்தைதான் நான். இப்போத்தானே இந்தப் புது வாழ்வு எங்களுக்கு வந்திருக்கு...'' என்று கூறிச் சிரித்தான் அஸ்வத்.

அவனது கபடமற்ற முகம்...... வெளிப் படையான பேச்சு எல்லாம் அவருக்கு ரொம்பவே மனநிறைவைக் கொடுத்தது.

'பெரிய வேலையில் அஸ்வத் சேர்ந்துவிட் டான். கையில் காசும், பதவியும் வந்துவிட் டால் பெரியப்பா பெரியம்மான்னு அவன் ஓடிவர மாட்டான்' என்று உறவினர் யாரோ சொன்னபோது அவருக்குமனத்தாங்கலாகத் தான் இருந்தது.

'இந்தக் காலத்து இளைஞன் — வயதான பெரியப்பா கிழத்தைப் பற்றி அவன் ஏன் கவலைப்படப் போகிறான்?' என்று சில சமயம் அவர் சந்தேகித்ததும் உண்டு.

ஆனால் இந்தக் காலத்து இளைஞர்களைச் சட்டென்று கடுமையாகக் கணித்துவிட முடியுமா?

அவர்கள் மனத்தில் பெரியவர்கள் மீது அன்பும் மரியாதையும் இருக்கத்தானிருக் கின்றன. அதை அடையப் பெரியவர்கள் தான் தமது அணுகுமுறையை மாற் றிக் கொள்ள வேண்டும் என எண்ணிய படி... 'தானும் தன் மனைவியும் சீராட்டிப் பாராட்டி ஆளாக்கிய பிள்ளை... பண்பாள னாக — அன்பாளனாக வளர்ந்து விட்டிருக்கி றானே' என்ற பெருமையுடன் அவனைப் பலமுறை ஓரக்கண்ணால் பார்த்து மகிழ்ந் தார் சுவாமிநாதன்.

அதற்குப் பின்னர் அவன் நண்பனைப் போல — நல்லதொரு சகோதரன் போல் தமாஷாகப் பேசினான். பெரியப்பாவுடன் அவர் தயாரித்திருந்த எளிய உணவை உண்டு மகிழ்ந்தான்.

கையைக்கழுவிக்கொண்டு—தான் உடுத்தி யிருந்த பாண்ட் சட்டையைக் களைந்து சாய்வு நாற்காலி மீது மடித்துப் போட்டான். கொடி யில் காய்ந்து கொண்டிருந்த பெரியப்பாவின் லுங்கியை எடுத்து அணிந்து கொண்டு, மூலையில் சுருட்டிச் சாத்தி வைக்கப்பட்டி ருந்த பாயை எடுத்து விரித்துத் தரை மீது போட்டுக் கொண்டு படுத்து விட்டான்.

கடபுடவென்று சப்தமிட்டுச் சுழன்று கொண்டிருந்த மின்விசிறி அடியில், தலை முடி நெற்றி மீது புரளப் படுத்துக் கிடந்த அவனை அன்போடு பார்த்த சுவாமிநாதன் நெஞ்சம் நெகிழ்ந்து போனார்.

''நல்ல உத்தியோகத்திலிருக்கான் குழந்தை. ஆனாலும், அவனுக்குக் கர்வம் கிடையாது... நம் மேலே ரொம்பவே ஆசை வச்சிருக்கான்...'' மேலே பேச முடியாது மனைவியின் முகத்தைப் பார்த்தார் சுவாமி நாதன்.

''தூங்கட்டும்பாவம்—பிரயாணக்களைப்பு. அவன் வருகிறது தெரிஞ்சிருந்தால் நான் கூட மாட உங்களுக்கு உதவி,கொஞ்சம் நன்னா சமைச்சிருப்பேன்...'' என்று விமலா மெல் லிய குரலில் சொன்னாள்.

''உன்னைப் பார்க்கணும்னு ஓடி வந்திருக் கான். அதை நினைச்சுப் பார்... இந்தப் பிள்ளை நம்மிடம் ஒட்டிக்கிறதைப் பார்த்தால் அருணா வுக்குப் பிடிக்கவே பிடிக்காது!''

''அருணா தன்கிட்டே பிள்ளை ஒட்டிக்க விடாமல் கிளப்பு, மீட்டிங்குன்னு வெளியே சுத்திக்கிட்டிருந்தாள்! குழந்தைகளைக் குளிப் பாட்டுகிறதிலிருந்து — சாப்பாடு போட்டுப் பள்ளிக்கூடம் அனுப்புகிறவரை நாம் கவனிச் சுக் கொண்டோம். ஒரு ஜுரம், தலைவலி என்றால்கூட இரண்டுகுழந்தைகளும்நம்மைத் தானே வந்து கட்டிண்டு அழும்! அருணா வுக்குக் குழந்தைகளைக் கவனிக்க எங்கே பொழுது இருந்தது...?''



தலைவர்: "உள்கட்சிச் சண்டையை சமாளிப்போமேன்னு ராஜினாமா செய்யப் போறேன்னு சொன்னது தப்பா போச்சு."

மற்றவர்: "ஏன்?"

தலைவர்: "சரி, ராஜினாமா செஞ்சுடுங்கன்னு சொல்லிட்டாங்களே."

— கீழை அ. கதிர்வேல்.

"நம்ம குழந்தைகளா அவர்களை நினைச்சு நாம் வளர்த்தோம்— அவர்களும் அப்படியே தான் நம்மிடம் அன்பைச் சொரிகிறார்கள்" என்று கூறி, அவன் அருகே பாயில் மெல்லச் சரிந்து கொண்டார் சுவாமிநாதன்.

சில நாட்களாகத் தம் மனைவியைக் கவனிப்பதிலே மிகவும் உடல் சோர்ந்து களைத்துப் போயிருந்த அவருக்கு அஸ்வத் தின் வருகை மிக்க தெம்பைக் கொடுத்தது. மகிழ்ச்சியில் அவர் மனம் திளைத்து உடனே உறங்கிப் போய்விட்டார்.

மாலை அவர்களிருவரும் எழுந்திருக்கு முன்னால், பொழுது அமிழத் தொடங்கி விட்டது. அவர்களுக்கு அப்படி ஒரு ஆழ்ந்த உறக்கம்!

முகத்தைக் கழுவிக் கொண்டு முடியை வாரி உடையை மாற்றிக் கொண்டு அவன் மோடா மீது அமர்வதற்குள், விமலா தான் மெள்ள எழுந்து சென்று தயாரித்துவிட்டிருந்த தேநீரை டம்ளரில் நிறைத்து அவர்கள் அருகே கொண்டு வந்து வைத்தாள்.

"கொஞ்சம் என்னை எழுப்பக்கூடாதா...?" என்று கேட்டுச் சுவாமிநாதன் அன்பு மனைவியைக் கடிந்து கொண்டார்.

"வள்ளி பால் பொட்டலத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள். இன்றைக்கு டீ போட்டுத் தருவோமேன்னு நான் தயார் பண்ணினேன்" என்றாள் விமலா.

"பாலை பிளாஸ்க்கிலே போட்டு வைத்து விடு... நான் இவனை அழைத்துக் கொண்டு போய் வெளியிலே டிபனுக்கு ஏற்பாடு செய்கிறேன். நீ பேசாமல் ஓய்வு எடுத்துக் கொள். தோட்டத்தைச் சுத்தி வராதே..." என்று கூறி விட்டுப் பரபரப்புடன் வெளியே கிளம்பத் தயாரானார் சுவாமிநாதன்.

"நல்லவேளை, நாம் இங்கே வந்தோம். ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு பேசச் சௌகரியமான இடம்..." என்று சிரித்தபடி ஹோட்டல் வந்தனுவின் சாப்பாட்டறைக் குள் ஒதுக்குப்புறமாக இருந்ததொரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான் அஸ்வத்.

"உனக்குத் தெரியும். இந்த ஹோட்டல் பரோட்டா ரொம்ப பேர் போனதுன்னு. இப்பவெல்லாம் சன்னாபட்டோரா தயாரிக்கிறார்கள். அதுவும் ரொம்ப நன்னா இருக்கு. வேறெங்கேயும் இப்படி நாக்குக்கு ருசியாக டிபன் கிடைக்காது!" என்றபடி அவர் ஹோட்டல் பையனிடம் தேவையான உணவுப் பொருள்களைக் கூறிவிட்டு அவன் எதிரே நாற்காலியில் உட்கார்ந்தார்.

"ஆஸ்பத்திரிக்கு உங்களுக்கு என்ன செலவு ஆச்சு என்று என்கிட்டே ஒண்ணும் சொல்லவில்லையே பெரியப்பா! பெரியம்மா உடம்பு தேற என் பங்காக இரண்டாயிரம் கொடுக்க எடுத்துக் கொண்டு வந்திருக்கேன்...!"

"வேண்டாம்—நீயே வச்சுக்கோ. உனக்குத் தேவைப்படும். இந்தத் தடவை எப்படியோ சமாளித்து விட்டேன் கவலைப்படாதே..." அஸ்வத் மணி பர்சைத் திறந்து இழுத்த நோட்டுக் கத்தையை வாங்க மறுத்துவிட்டார், சுவாமிநாதன்.

பையன் கொண்டு வந்து வைத்த டிபனை மெல்லச் சாப்பிட்டபடி பெரியப்பா வேடிக்கையாக அவனிடம் கேட்டார்.

"என்னவோ நிறைய பேசணும்னு ஆரம்பிச்சே. இங்கே வந்தது நல்லதாப் போச்சுன்னு பீடிகை போட்டாய். என்ன சங்கதி? சொல்லு... கார்த்தால போன பிள்ளையை இன்னும் காணோமேன்னு உங்கம்மா... உள்ளுக்கும் வாசலுக்கும் அலைபாய்ந்து கொண்டிருப்பாள்!"

"போன் பண்ணித் தெரிந்து கொள்வாள். கவலைப்படாதீங்க. உங்ககிட்டதான் ஆலோசனை கேட்கணும்னு ஓடிவந்திருக்கேன் பெரியப்பா...!" என்ற அவனது குரலில் கவலை தொனித்தது.

"நீ இன்னதுன்னு சொல்லாவிட்டால்கூட என்னால் புரிந்து கொள்ள முடியும்... உன் கல்யாணத்தைப் பற்றித்தானே?" என்று கேட்டுச் சிரித்தார், சுவாமிநாதன்.

"டக்கென்று சொல்லிவிட்டீர்களே. நீங்கள் எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?"

"உன் முகம் சொல்கிறதே... காதல் கல்யாணமோ? முழுக்கச் சொல்லி விடு."

"பெரியப்பா... உங்களுக்கு எப்படி புரிகிறது என் மனசைப் பத்தி... நீங்க சரியா சொல்லிவிட்டீர்கள். மஞ்சுளா என் அலுவலகத்திலேதான் வேலை பார்க்கிறாள். கணக்கு வழக்குப் பகுதியிலே ஒரு சாதாரண கணக்கர். அவளுக்குச் சம்பளம் அதிகமில்லே...!" என்று இழுத்தான்.

"நீ மேலே சொல்ல வேண்டாம், நான் சொல்லிடறேன். கன்னடப் பொண்ணு... ரொம்பச் சாதாரணக் குடும்பம். ஆனால் கண்ணுக்குப் பார்க்க லட்சணமாக இருப்பாள்! ரொம்ப நல்லவள்! எட்செட்ரா எட்செட்ராதானே..." உரத்த குரலில் சிரித்தார் சுவாமிநாதன். பக்கத்திலே... டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒரு சிலர் இவர்களைத்



# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (REGD.)

(Eye Donation Information Centre)

1-57, North Mada Street, Po. Tirumala Hills-517504.

**Via-Tirupati**

ஸ்ரீ காஞ்சி சங்கராச்சார்யர் ஸ்வாமிகளின் ஆசியுடனும் அன்பார்ந்த வாசகர்களின் விசேஷ உதவியுடனும் திருப்பதி – திருமலை புண்ய க்ஷேத்திரத்திலிருந்து எமது நவஜீவன் சேவா கேந்திரம் விழிகளை இழந்தவர்களுக்குப் பலவிதங்களிலும் சேவை செய்வதோடு கண்தானத்தின் சிறப்பைப் பற்றியும் விசேஷமாகப் பிரசாரம் செய்து வருவது குறித்து வாசகர்கள் அறிந்ததே.

**உதவி அளிக்கப்படும்:** முற்றிலும் விழிகளை இழந்தவர்கள் முறைப்படி சாஸ்திரிய சங்கீதம் அல்லது வேதம், திவ்யப் ப்ரபந்தம் அல்லது ஏதேனும் ஒரு சாஸ்திரீயக் கலையில் தேர்ச்சிப் பெற்று இருந்தால் அவர்களை திருமலை புண்ய க்ஷேத்திரத்திற்கு வரவழைத்து ஆயிரம் ரூபாய்கள் ரூ. 1000/– ஸன்மானம் வழங்கப்படும். மேலும் விழிகளை இழந்த ஆண் அல்லது பெண்ணை மணக்க முன்வரும் நல் உள்ளம் படைத்தவருக்கும் ரூ. 1000/–ஸன்மானம் அளிக்கப்படும் அல்லது எமது Group Blind marriage scheme ல் சேர்த்துக்-கொண்டு திருமலையில் இலவசமாகத் திருமணம் செய்து வைக்கிறோம். சம்பந்தப் பட்டவர்களின் தாய் தந்தையர்கள் அல்லது உறவினர்களிடமிருந்து விவரம் கோரப் படுகிறது.

**வேண்டுகோள்:** எதிர்காலத்திலும் விழிகளை இழந்தவர்களுக்கு எமது சேவையை விசேஷமாக விஸ்தரிக்கும் பொருட்டு அன்பர்களின் உதவியை பெரிதும் வேண்டுகிறோம். கலியுக கண்கண்ட தெய்வமான ஸ்ரீ வெங்கடாசலபதி திருக்கோயில் கொண்டிருக்கும் இந்தத் திருமலை புண்ய க்ஷேத்திரத்தில் எந்த ஒரு தொண்டு செய்தாலும் அதற்கு ஆயிரம் மடங்கு அதிகமாகப் புண்ய பலன்கள் கிடைப்பதாக புராணங்கள் கூறுகின்றன. விழிகளை இழந்து வாழ வழி தெரியாமல் இருண்ட உலகத்தில் பரிதவிக்கும் சுமார் 92 லட்சம் மக்களில் ஒரு சிலருக்காவது உணவு உடை மற்றும் கல்வி அறிவு அளிக்க இந்த சேவா கேந்திரம் பெரிதும் முயற்சித்து வருகிறது. இந்தப் புனிதத் தொண்டின் பொருட்டு ரூ. 501/– அனுப்பும் கருணை உள்ளம் படைத்த அன்பர்களின் சார்பாக வருஷம் பூராவும் பிரதி நித்யமும் உங்கள் பெயர், கோத்திரம், ராசியில் ஸ்ரீ வெங்கடாசலபதிக்கு அர்ச்சனை செய்வித்து, மஹா பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்; அல்லது உங்களது திருமணநாள், குழந்தைகளின் பிறந்த நாள் போன்ற விசேஷ நன்னாளைக் குறிப்பிட்டால் அன்றைய தினம் ஸ்ரீ ஏழுமலையானுக்கு விசேஷ அர்ச்சனை பூஜை ஏற்பாடு செய்வித்து, விழிகளை இழந்தவர்களுக்கு அன்னதானமும் ஏற்பாடு செய்வித்து, மஹா பிரசாதமும் அனுப்பி வைக்கப்படும். மேலும் நீங்கள் குடும்பத்துடன் திருமலை யாத்திரை தர்சனத்திற்கு வரும்போது தேவையான உதவிகளையும் அளிக்கிறோம்.

மேலும் ஒரு குறிப்பிட்ட நன்னாளில் ரூ. 51/– அனுப்பும் அன்பர்களின் சார்பாக விசேஷ பிரார்த்தனை செய்வித்து பார்வையற்றவர்களுக்கு அன்னதானமும் ஏற்பாடு செய்து ஸ்ரீ ஸ்ரீனிவாஸ பெருமானின் விசேஷ பிரசாதமும் அனுப்பி வைக்கிறோம். இந்தப் புனிதச் சேவையில் கலந்துக் கொள்ள விரும்பும் அன்பர்கள் தங்களுடைய நன்கொடையை க்ராஸ்ட் செக்/ட்ராப்ட்/M.O. மூலமாக மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு அனுப்பிவைக்கும்படி வேண்டுகிறோம்.

**"விழிகளை இழந்த அன்பார்ந்த சகோதர, சகோதரிகளுக்கும் தொடர்ந்து உதவி அளித்து வரும் கருணை உள்ளம் படைத்த வாசகர்களுக்கும் எமது மனம் கனிந்த புத்தாண்டு வாழ்த்துக்கள்."**

**K. SRINIVASAN.**
**Secretary.**

திகைப்புடன் திரும்பிப் பார்த்தனர்.

அஸ்வத் முகம் சிவந்து போனான். ஆனாலும் பெரியப்பாவிடம் அவனுக்குக் கோபம் ஏற்படவில்லை.

அவரது குறும்பு சுபாவத்தைக் கண்டு ரசித்தான்.

''சரியாகச் சொல்லிவிட்டீர்கள் பெரியப்பா... நான் விவரிக்கத் தேவை இல்லை. மஞ்சுளாவை நான் காதலிக்கிறேன். அவளும் என்னை விரும்புகிறாள். நாங்கள் கல்யாணம் செய்து கொள்கிறதைப் பற்றி அவளது பெற்றோர்களுக்கு ஆட்சேபணை இல்லை... ஆனால் இங்கே அம்மாதான்...''

அருணா உண்மையைத் தெரிந்து கொண்டால் நிச்சயம் ஒப்புக் கொள்ள மாட்டாள். வரதட்சணை, வைர அட்டிகை, தங்க வளைகள்... மாருதி கார்... என்று அவள் உன்னை வைத்துக் கொண்டு ஏகப்பட்டதை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள்!... நீ கட்டின புடவையோடு வரப்போகிற ஒரு கன்னடப் பெண்ணைக் காதலிக்கிறேன் என்றால்... சம்மதிப்பாளா? வீடு இரண்டுபடப் போகிறது. இடைபுகுந்து எல்லாம் சுபம் சுபம்னு செய்து வைக்கச் சொல்கிறாய். அப்படித்தானே!''

''பெரியப்பா நீங்கள் ஐஸ்வரியாவுக்கு உதவி செய்யவில்லையா? அதைப் போலத்தானே...?''

''என் தலை அதுக்காக இன்னும் உருண்டு கொண்டு கிடக்கிறதே!''

''எனக்கு இந்த விஷயத்தில் நீங்கள் உதவி செய்தாகணும்! மறுத்துவிடக் கூடாது!''

''சரி, உன் அப்பாவைப் பார்த்துப் பேசி வாங்கிக் கட்டிக்கணும்னு சொல்றே?''

''நீங்களே பயப்பட்டால் எப்படி? பெரியப்பா! மாட்டேன்னு சொல்லாமல் எனக்கு நீங்க உதவணும்!'' என்று குழைந்தான் அஸ்வத்.

இருவரும் ஹோட்டலை விட்டு வெளியே வந்தபோது நன்றாக இருட்டிவிட்டிருந்தது. பெரியப்பாவைக் கொண்டு வந்து திரும்ப வீட்டில் சேர்த்தான். பெரியம்மாவை நமஸ்கரித்து விடைபெற்றுக் கொண்டு... ஒரு ஆட்டோவில் அவன் வீடு திரும்பினான். அருணா வாயில் படியருகே நின்று கொண்டிருந்தவள் அவனை வெறித்து நோக்கினாள்.

''ரெண்டு தடவை நான் போன் பண்ணி விட்டேன். பெரியப்பாவோட வெளியில் போயிருப்பதாகத் தகவல் கிடைத்தது. காலையில் போனவன்...'' என்று படபடவென ஆரம்பித்தாள் அருணா.

''செத்துப் பிழைச்சிருக்கிற பெரியம்மாவைப் பார்த்துவிட்டு அவர்களோடு கொஞ்ச நேரம் இருந்துவிட்டு வருகிறேன். அதனால் என்ன? பெரியப்பாவிடம் ஆஸ்பத்திரிச் செலவு அதிகமாயிருக்குமே உதவலாமா என்று கேட்டுத் தெரிந்து கொள்ள நேரமாச்சு!''

''ஏன் கேட்டே? இதுதான் சாக்கென்று மூக்கால் அழுதிருப்பாரே மனுஷன்!''

''அவர் பணம் வேண்டாம், தாமே சமாளித்துவிட்டதாகக் கூறினார். ஆனால் நான்தான் மனசு கேட்காமல் அவருக்குத் தெரியாமல் இரண்டாயிரம் ரூபாய்களை அவருடைய சட்டைப் பையில் வைத்துவிட்டு வந்திருக்கேன்!'' என்றான், அஸ்வத்.

தேள் கொட்டியது போல் துள்ளிக் குதித்தாள் அருணா.

''எதுக்குக் கொடுத்தாய்? இங்கே வீட்டில் எத்தனை செலவு இருக்குன்னு உனக்குத் தெரியாதா...?'' பொருமையில் வெடித்தாள்.

''பெரியப்பாவுக்கு நாம் எவ்வளவோ செய்யணும். இப்ப எனக்கு இவ்வளவுதான் செய்ய முடிஞ்சது. அதுக்கே நான் குறைபட்டுண்டு இருக்கிறேன். நீங்க வேறே விதமா சொல்றேளே. ஆமாம் அது என்ன கையில் கடிதாசி?'' என்று பேச்சை மாற்றியபடி உள்ளே நுழைந்தான், அஸ்வத்.

''உன் தங்கை ஐஸ்வர்யா லண்டனிலிருந்து கடிதம் போட்டிருக்கிறாள். அதைப் படிச்சிண்டிருந்தப்போ வாசலில் வண்டி நிக்கிற சத்தம் கேட்டது. அப்படியே வந்துவிட்டேன். சாயங்காலம் வந்த தபால். இப்பத்தான் எனக்குப் படிக்க முடிஞ்சது. லேடீஸ் கிளப் மீட்டிங் முடிந்து சிறிது முன்னடிதான் வந்தேன்.''

''ஐஸ்வரியா லண்டனுக்கு வந்திருக்காளா? என்ன சங்கதியாம்?''

''எனக்கென்ன தெரியும்? திடுதிப்புனு நீ பெங்களூரிலிருந்து வந்திருக்கிறாற்போல் அவளும் வந்து நாளைக்கு நிற்பாளாக்கும்...!''

''ஏம்மா... குழந்தைகள் உன்னைப் பார்க்க ஆசைப்பட்டு திடுதிப்புனு வருகிறது தப்பா?'' வேடிக்கையாகக் கேட்ட மகனின் முகத்தைப் பார்க்கத் தயங்கினாள் அருணா. அவள் தனக்குள்ளே ஏதோ முணுமுணுத்தவளாக உள்ளே சென்றாள்.

ஐஸ்வரியா திடீரென்று அம்மாவைப் பார்க்க வருவது அவளுக்குப் பிடிக்கவில்லை. மகன் சொல்லாமல் கொள்ளாமல் வந்ததும் அவளுக்குப் பிடிக்கவில்லை... இந்த இரண்டு பேரும் சேர்ந்து தன்னைக் குழப்பப் போகிறார்கள்-என்றதொரு உள்ளுணர்வில் எரிச்சலும் — துயரமுமாக அருணா தவித்தாள்!

(தொடரும்)



முகம்மது நபி ஒரு பூனையை அன்போடு வளர்த்து வந்தார். ஒருநாள் அந்தப் பூனை அவர் மேலாடை மீது தூங்கிக் கொண்டிருந்தது. கடவுளைத் தொழ நேரமாகி விட்டது. அவர் பூனையின் தூக்கத்தைக் கெடுக்க விரும்பவில்லை. தமது மேலாடையின் ஒரு பகுதியைப் பூனைக்குத் தொந்தரவு தராதவாறு வெட்டிவிட்டுத் தொழுகைக்குப் போனார்.

— லட்சுமி சிவம்.










உடலோடு இணைந்து உள்ளம் கவர்ந்து
எழில் நிறைந்து... ஈடிணையற்றது...

**டான்டெக்ஸ்**®

TTK தயாரிப்பு

Imageads M-1944

# சித்தரஞ்சனி

## 23. காஷ்டானனுக்கு இருவழிகள்!

நாபிலேசுவரர் கோவில் கர்ப்பக்கிரகத்தில் லிங்கத்தின் பக்கத்திலிருந்த ஓலையைக் கண்டதும் க்ஷத்ரபன் சினமடைந்து காஷ்டானனைப் பற்றிய எரிச்சலுடன் கூவினானென்றால், வாயிலுக்கு வந்ததும் தனது காலடியில் அம்பு மூலம் பறந்து வந்து கிடந்த ஓலையைப் படித்ததும் பெரும் பிரமிப்புக்குள்ளானானென்றால், அவற்றுக்கெல்லாம் காரணம் இருக்கவே செய்தது. முதல் ஓலையைக் காஷ்டானனே எழுதி இருந்ததையும், அதில், ''எதிரிகளிடம் சிக்கிக் கொண்டேன், தப்ப வழியில்லை'' என்று செய்தி பரம சுருக்கமாயிருந்ததையும் கண்ட க்ஷத்ரபன், இரண்டாவது ஓலையில் செய்தி விவரமாகவே தீட்டப்பட்டிருந்ததைப் பார்த்தான். ''மகாக்ஷத்ரபரே! நீர் இந்தப் பகுதியை விட்டுச் செல்ல நான்கு நாட்கள் தருகிறேன். அதற்குள் நீர் அஞ்சன்வேல் கோட்டையை விட்டுச் செல்லாவிடில் நானே எனது வீரர்களுடன் வந்து அதைத் தாக்குவேன்—கௌதமிபுத்ரன்.'' என்ற வாசகத்தைப் படித்ததும், தான் அஞ்சன்வேல் திரும்புவதைத் தவிர வேறு வழியில்லை என்பதைப் புரிந்து கொண்டான் க்ஷத்ரபன். அப்படிப் புரிந்து கொண்டது பெரும் திகிலை அளித்தது க்ஷத்ரபனுக்கு. காரியத்தைச் சாதிக்காமல் தான் திரும்பினால் தன்னைத் தூக்குப் போட்டுவிடுவதாக மகாக்ஷத்ரபன் எச்சரித்தது நினைவிருந்ததாலும் மகாக்ஷத்ரபன் சொல்வது வீண் பயமுறுத்தல் இல்லையென்பதை க்ஷத்ரபன் உணர்ந்திருந்ததாலும் திரும்பிச் செல்லத் தயங்கவே செய்தான். அப்படி தான் திரும்பிச் செல்லாவிட்டாலும் உடன் வந்திருக்கும் வீரர்கள் தன்னைக் கட்டித் தூக்கிப் போய்விடுவார்களென்றும், தோல்வியை அவர்கள் வாயால் மகாக்ஷத்ரபரிடம் சொல்லும் பயத்தில் எதையும் அவர்கள் செய்யச் சித்தமாயிருப்பார்களென்றும் தீர்மானித்ததால் திரும்புவதைத் தவிர வேறு வழியில்லை என்பதைத் தீர்மானித்துக் கொண்டான். அப்பொழுது ஒரு புது யோசனையும் க்ஷத்ரபன் மூளையில் உதயமாகவே அவன் தனது வீரர்களை நோக்கி, ''வீரர்களே! காஷ்



சாண்டில்யன்

டானன் நம்மை மோசம் செய்துவிட்டான். ஆனால் நாம் அஞ்சப் போவதில்லை. நீங்கள் காட்டுக்குள் சென்று எதிரியின் நிலையையும் காஷ்டானன் சிறை வைக்கப்பட்டிருக்கும் இடத்தையும் கண்டு பிடியுங்கள். அவனைச் சிறை மீட்டுச் செல்வோம்'' என்று உத்தரவிட்டான்.

க்ஷத்ரபன் மிக கம்பீரமான அதிகாரக் குரலில்தான் உத்தரவிட்டான். ஆனால் அவன் எதிரே நின்ற வீரர்கள் அசையாமல் பதுமைகள் போல் நின்றார்கள். அவர்கள் கற்சிலைகளைப் போல் நிற்பதைக் கண்ட க்ஷத்ரபன் சினம் அதிகமாகவே, ''நான் சொன்னது உங்கள் காதில் விழவில்லை?'' என்று சீறினான்.

அதற்கும் வீரர்கள் பதில் சொல்லாமல் இடித்த புளியைப் போல் நிற்கவே, ''ஏன், உங்களுக்கு வாயில்லையா பேச? பதிலாவது சொல்லுங்கள். இல்லையேல்?'' என்று தனது வாட்பிடியின் மீது கையை வைத்தான். அப்பொழுது ஒரு வீரன் மட்டும் பேசினான். ''படைத் தலைவரே! எங்களை விரட்டிப் பயனில்லை. காஷ்டானனையும் அவருடன் சென்ற முதல் பத்துப் பேரையும் பிடித்த எதிரிக்கு நம்மை அழிப்பது பெரும் காரியமல்ல. இது சாதாரண பூமியல்ல நாம் எதிருக்கு எதிர் போராடுவதற்கு. மலைக்காடு. எதிரி எங்கு எப்படிப் பதுங்கியிருப்பானென்று தெரியாது. நாங்கள் காட்டுக்குள் புகுந்தவுடன் மறைவிலிருக்கும் எதிரி, நம்மை ஒவ்வொருத்தராகவும் கொல்லலாம். பத்துப் பேரையும் ஒரே வழியாகவும் சூழ்ந்து தீர்த்துக் கட்டலாம். தவிர மலைவாசிகள்....

என்று வாசகத்தை முடிக்கவில்லை அவன்.

முடிக்காத வார்த்தைகளையும் அவற்றின் பொருளையும் உண்மையையும்கூட, க்ஷத்ரபன் புரிந்து கொண்டான். ஏற்கெனவே மரங்களின் மறைவுகளிலிருந்து, கற்களையும்,



கட்டைகளையும் வீசித் தனது வீரர் கூட்டத்தைச் சிதற அடித்த மலைவாசிகள், மலைக் காட்டின் ஒரு பகுதி எரிக்கப்பட்டதால், பழி வாங்கச் சித்தமாயிருப்பார்களென்பதையும் உணர்ந்துகொண்டதால் தனக்கு இரு பாதைகளே உண்டென்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டான். "ஒன்று இங்கேயே சண்டையிட்டுச் சாகலாம். அல்லது அஞ்சன்வேல் சென்று தூக்கிலாடலாம். இந்த இரண்டைத் தவிர வேறு வழி இடையாது" என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். விளைவு எதுவாயிருந்தாலும் வீரனை தனது கடமை நிச்சயமாகத் தெரிந்தது அவனுக்கு. திரும்ப அஞ்சன்வேல் சென்று தோல்வியை அறிவிப்பதே தனது கடமை என்று தீர்மானித்துக்கொண்டு, "சரி வாருங்கள், போகலாம்" என்று வீரர்களை அழைத்துக்கொண்டு புறப்பட்டான்.

தாபிலேகவரர் கோவிலிலிருந்து க்ஷத்ரபன் தனது வீரர்களுடன் புறப்பட்டுச் சென்றதைச் சற்று எட்ட இருந்த மரத்தின் மறைவிலிருந்து பார்த்துக்கொண்டிருந்த கௌதமிபுத்ரன் தனது அருகில் நின்றிருந்த காஷ்டானனை நோக்கி "நீயும் அவர்களுடன் போவதானால் போகலாம்" என்று கூறினான்.

காஷ்டானன் முகத்தில் கிலி முற்றும் படர்ந்து கிடந்தது. "நான் எங்கிருந்தாலென்ன? அங்கு மகாக்ஷத்ரபர் தூக்கில் போடுவார். இங்கு நீங்கள் என்னை வெட்டிப் போடலாம். எங்கு செத்தால் என்ன? சாவில் வித்தியாசம் என்ன வேண்டிக் கிடக்கிறது?" என்று வெறுப்பும் கிலியும் கலந்த குரலில் பேசினான் காஷ்டானன்.

"காஷ்டானா! சாவிலும் வித்தியாசங்கள் இருக்கின்றன" என்று கௌதமிபுத்ரன் சுட்டிக்காட்டினான்.

"உயிர் போவது தானே சாவு?" என்று கேட்டான் காஷ்டானன்.

"இருந்தாலும் எப்படிப் போவது என்பதில் வித்தியாசங்கள் உண்டு."

"என்ன வித்தியாசமோ?"

"காஷ்டானா! போரில் உயிர் துறப்பது ஒருவகை. குற்றவாளியாகத் தண்டிக்கப்பட்டு வாளால் துண்டிக்கப்பட்டோ அல்லது கயிற்றில் தொங்கியோ சாவது ஒருவகை. நாட்டுக்காக உயிர்த் தியாகம் ஒரு வகை. எதற்கும் பயனில்லாமல் உண்டு காலம் கழித்து இறப்பது ஒரு வகை. இந்தச் சாவுகளில் ஒரு வகை மீளாப் புகழ் அளிக்கும். இறந்த பின்னும் இறவா நிலையை அளிக்கும். மற்ற வகைச் சாவு புழு பூச்சிகள் சாவதைப் போல் பயனற்ற சாவு" என்று மரண காரணங்களை விளக்கினான் கௌதமிபுத்ரன்.

ஆனால் காஷ்டானன், அந்தக் காரணங்களை ஒப்புக்கொண்டதாகத் தெரியவில்லை. அதைரியமுள்ளவர்களுக்கு இயற்கையாக இருக்கும் குயுக்தி வேலை செய்ய ஆரம்பித்ததால் அவன் பதில் சொன்னான்: "சாதவாகனரே! போர்களில் யார் பக்கம் நாம் போரிடுகிறோம் என்பதையும் பொறுத்தது புகழும் அபவாதமும். துரியோதனன் பக்கத்தில் மடிந்த சகுனி துச்சாதனன் முதலிய எல்லா வீரர்களையும் உலகம் இன்னும்

## அருள்வாக்கு

ரொம்பவும் உசந்த முறை பண எண்ணமே இல்லாமல் நடக்கிற குருகுலக் கல்விதான். பரம த்யாகிகளாக வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி வாழத் தயாராக, வித்யை ப்ரசாரம் ஆக வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் போதிக்கிறவர்கள் நடத்தும் குருகுலத்துக்கு எதுவும் ஈடாகாது. இப்படிப் பட்டவரின் அறிவு விசேஷத்துடன் மனஸ் விசேஷமும் சேர்வதால் அப்போதுதான் சிஷ்யர்களுக்கு மிகவும் உயர்ந்த வித்யா விலாஸம் உண்டாகும். ஆனால் இவன் வயிற்றைக் கட்டிக் கொண்டாலும் சிஷ்யனாக இருக்கிற இளவயசுக்காரனின் வயிறு வாடப் படாதே. அத்யயனம் செய்த ப்ராம்மணன் என்றால் நிச்சயமாக அவனுக்கு மான்யமாக ஸொத்து இருக்கும் என்ற பழங்கால நிலை இப்போது இல்லையே! தனக்கே 'ததிங்கிணதோம்' போடுகிற வேத பண்டிதர் சிஷ்யனை வேறு எப்படிப் பராமரிப்பார்? இங்கே தான் சிஷ்யனின் பிக்ஷாசர்யம் கைகொடுக்கிறது. அவன் பிக்ஷை எடுத்தே தன்னுடைய பாட்டைக் கவனித்துக் கொண்டு விட வேண்டும். அது மட்டுமில்லை. தனக்காக நாலு வீட்டுக்குப் போய் பிக்ஷை கேட்க வேண்டுமென்றால் வாத்யாருக்காக இன்னும் நாலு வீட்டுக்குப் போகவேண்டும். அவருக்குப் பக்குவமான (சமைத்த) ஆஹாரம் பிக்ஷையாகக் கிடைக்கக்கூடாதாகையால் அவருக்கானதை அரிசி, பருப்பு, காய்கறி என்று வாங்கி வர வேண்டும்.



கல்வி அளிப்பது ஒன்றே நோக்கமாயிருக்கிற த்யாகி வாத்யாரைப் போல, கல்வி பெறுவது ஒன்றே நோக்கமாயிருக்கிற த்யாகி மாணவன்தான் இப்படி பிக்ஷாசர்யம் செய்து குருகுல வாஸம் செய்வான்.

இம்மாதிரி எல்லாம் இந்தக் காலத்தில் யாராவது கிடைப்பார்களா? இதென்ன காரியத்துக்கு உதவாத பேச்சு' என்று நினைக்கலாம். அதற்காக உத்தமமான ஐடியல்களை வாயாலாவது சொல்லி, ஞாபகப் படுத்தக்கூட குருப் பட்டம் கட்டிக் கொண்டவன் தவறி விடக்கூடாது என்பதால்தான் சொல்கிறேன்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

ஆசிரியர்: "எனது முன்னாள் மாணவன் ஒருத்தன் பரீட்சையிலே சைபர் மார்க்குத்தான் வாங்குவான். இப்ப பெரிய பதவியில் இருக்கான்!"

நண்பர்: "என்ன பதவியிலே இருக்கார்?"

ஆசிரியர்: "மந்திரி பதவிதான்!"

நண்பர்: "அப்பமன்னு அன்னைக்கும் சைபர்தான்; இன்னைக்கும் சைபர்தான்னு சொல்லாம சொல்றீங்களா!"

— இரா. சம்பத்குமார்.



தூஷித்துக் கொண்டிருக்கிறது. பாண்டவர் பக்கத்திலிருந்தவர்கள் எல்லோருமே வாழ்த்தப்படுகிறார்கள். இராவணன் பக்கத்திலிருந்த மகாவீரர்களையெல்லாம் உலகம் தூற்றுகிறது. ஆகவே எல்லாச் சாவும் புகழை அளிக்காது. அதற்குச் சரியான பக்கத்திலும் சேரவேண்டும்" என்று.

காஷ்டானன் புத்தி கூர்மையையும் கோழைத்தனத்துக்கு அவன் சப்பைக் கட்டுக் கட்டுவதையும் கவனித்த கௌதமிபுத்ரன் புன்முறுவல் கொண்டு, "காஷ்டானா, அப்படியானால் சாதவாகனர் சாகர் போரில் நீ யார் பக்கம் இருக்க விரும்புகிறாய்?" என்று வினவினான்.

"இதில் என் விருப்பம் என்ன இருக்கிறது?" என்று வினவினான் காஷ்டானன்.

"ஏன் இல்லை? என் பக்கம் இருக்கலாம் அல்லது மகாக்ஷத்ரபன் பக்கமிருக்கலாம். வேறு இங்கு பக்கங்கள் ஏதுமில்லையே! சுலபமாக முடிவுக்கு வரலாமே" என்றான் சதகர்ணி.

"நான் உங்கள் பக்கம்சேர்ந்தால்?" என்று வினவினான்.

"சேரலாம்."

"இல்லாவிட்டால்?"

"உனக்கு விடை தருகிறேன். பழைய பக்கம் போகலாம்."

"உங்கள் பக்கம்தான் நான் இனி" என்று முடிவாகச் சொன்னான் காஷ்டானன்.

"அப்படியானால் உனக்கு ஒரு பணி கொடுக்கிறேன், செய்வாயா?" என்று வினவினான் கௌதமிபுத்ரன்.

"கட்டளையிடுங்கள்" என்றான் காஷ்டானன்.

"மறுக்காமல் செய்வாயா காஷ்டானா?" என்று கேட்டான் சாதவாகனன்.

"உயிர் போனாலும் செய்வேன்" என்று சொன்னான் காஷ்டானன்.

"அப்படிப்பட்ட ஒரு பணிதான் இது" என்ற கௌதமிபுத்ரன் புன்முறுவல் கொண்டான்.

கௌதமிபுத்ரன் தன்னை ஏதோ பெரும் சோதனைக்குள்ளாக்கப் பார்க்கிறான் என்று முடிவு செய்து கொண்ட காஷ்டானன், "என்னதான் சொல்லுங்கள்" என்றான்.

"காஷ்டானா! அதோ போகும் க்ஷத்ரபன் வீரர்கள் அக்கரை அடைந்தவுடன் நீயும் இங்கிருந்து கிளம்பிக் கடலில் நிற்கும் மரக்கலத்துக்குச் செல்."

"உம்."

"அங்கு நாகபாணன் இருக்கிறான்."

"ஐயோ!"

"அஞ்சாதே. அவனை நான் அதே மரக்கலத்தில் நாளை இரவில் சந்திப்பதாகச் சொல். நீ என் தூதனென்று சொல். உன்னை ஏதும் செய்யமாட்டான்."

"உங்களுக்கு மகாக்ஷத்ரபரைத் தெரியாது."

"நன்றாகத் தெரியும் காஷ்டானா! மகாவீரன். க்ஷத்திரியதர்மம் அறிந்தவன். தூதனைத் தொடமாட்டான். தவிர என் தூதனைத் தொடத் துணியமாட்டான்" என்ற கௌதமிபுத்ரன், "வா காஷ்டானா! வாசிஷ்டியின் முகத்துவாரத்துக்குப் போவோம்" என்று காஷ்டானன் கையைப் பிடித்து அழைத்துச் சென்றான்.

சாவுக்குச் செல்லும் ஆடு போல் சென்றான் காஷ்டானன். சென்றபோது தீர்க்க சிந்தனையுடன் சென்றான். 'மகாக்ஷத்ரபர் எங்களை அஞ்சன்வேல் கோட்டைக்குத் தானே வரச்சொன்னார். அப்படியிருக்க மரக்கலத்திலிருப்பதாகஇவர்சொல்வதுஎப்படிச் சரியாகும்?' என்று சிந்தித்த வண்ணம் சென்றான்.

இத்தகைய சிந்தனைகளுடன் சென்ற காஷ்டானன் படகில் ஏறி, வந்தது வரட்டும் என்று படகை மரக்கலத்தை நோக்கிச் செலுத்தினான். மரக்கலத்தை அடைந்ததும் ஏற்கெனவே தொங்கிக் கொண்டிருந்த நூலேணியில் ஏறிய காஷ்டானனை நாகபாணனே கையைப் பிடித்துத் தூக்கி மரக்கலத்துக்குள் இறங்கினான். "வா! என்னுடன்" என்று கூறி மரக்கலத்தின் நடுவிலிருந்த அறையை நோக்கி நடந்தான். உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு காஷ்டானனும் மகாக்ஷத்ரபனைப் பின்பற்றினான்.

(தொடரும்)

# நடக்காமல் போன

## விரக்தியால் வந்த வளர்ச்சி!

என் கணவருக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய பதவி உயர்வை ஆபீஸிலுள்ள வேறொருவர் தடுத்துவந்தார். அதனால் விரக்தியடைந்த நான் ஏற்கெனவே வீட்டில் — சிறிய அளவில் தயாரித்து நடத்தி வந்த அப்பளம், ஊறுகாய், பொடி வகைகள் வியாபாரத்தைச் சற்று தீவிரமாக நடத்த ஆரம்பித்தேன். என் கணவரையும் அதில் ஈடுபட வைத்தேன். பலன்? இன்று அந்த வியாபாரம் எதிர்பார்த்ததை விடவும் செழிப்பாக வளர்ந்துவிட்டது! பதவி உயர்வு கிடைத்திருந்தால் இப்படி வளர்ந்திருப்போமா என்ன!

— திருமதி எஸ். கமலம், உடுமலைப்பேட்டை.

## எல்லாம் நன்மைக்கே!



நண்பரின் மனைவிக்கு ஆபரேஷன் செய்துதான் குழந்தையை எடுக்க வேண்டும் என்ற நிலை. அப்போது அந்த டாக்டரின் மாமனாருடைய உடல்நிலை சீரியஸ் என்று செய்தி வரவே, அவர் வேறொரு டாக்டருக்கு ஃபோன் செய்து ஆபரேஷனுக்கு ஏற்பாடு செய்துவிட்டுச் சென்றார். என்ன ஆச்சரியம்! அந்த டாக்டர் புறப்பட்டு வருவதற்குள்ளாகவே நண்பரின் மனைவி அழகான ஆண் குழந்தையைப் பெற்றெடுத்துவிட்டாள். ஆபரேஷனே தேவையில்லாமல் போய்விட்டது!

— ஏ. தங்கசாமி, பொத்தனூர்.

## அப்பாவுக்கு நன்றி!

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு நான் பி.யு.சி. படித்து முடித்தவுடன் பி.எஸ்ஸியில் சேர ஆசைப்பட்டேன். என் தந்தையோ பொருளாதார வசதி இல்லையென்பதால் ஒரு மில்லில் என்னைக் கிளார்க்காக வேலைக்குச் சேர்த்துவிட்டார். இப்போது நான் மாதம் ஆயிரத்து ஐநூறு ரூபாய் சம்பளம் வாங்குபவனாக இருக்கிறேன். அஞ்சல் வழியில் படித்து பி. காம் பட்டமும் வாங்கிவிட்டேன். அன்று என் ஆசைப்படி என் தந்தை என்னை பி. எஸ்ஸியில் சேர்த்திருந்தால் நானும் ஒரு வேலை வேலையில்லாப் பட்டதாரியாகத் தானே இருந்திருப்பேன்!

— இ.பி. ரவி, உடுமலைப்பேட்டை.

## ஏமாற்றிய மாப்பிள்ளை!

அமெரிக்காவில் இருக்கும் ஒரு மாப்பிள்ளை பெண் பார்க்க வருவதாகவும், பரஸ்பரம் பிடித்துப் போய்விட்டால் உடனே திருமணம்தான் என்பதாலும் என் தோழி திருமண மண்டபம் முதற்கொண்டு அனைத்தையும் தயார் நிலையில் வைத்திருந்தாள். அந்த மாப்பிள்ளைப் பையனோ டெல்லியிலேயே ஒரு பெண்ணைப் பார்த்துத் திருமணம் செய்து கொண்டு போய்விட்டதை அறிந்ததும் என் தோழி மிகவும் அதிர்ந்து போய் விட்டாள். பிறகுதான் அந்த மாப்பிள்ளை ஏற்கெனவே ஓர் அமெரிக்கப் பெண்ணுடன் குடித்தனம் நடத்திக் கொண்டிருப்பதாகத் தெரிய வந்தது. என் தோழி அது கேட்டு மகிழ்ந்தாலும், டெல்லி பெண்ணை நினைத்து அனைவரும் வருந்தினோம்.

— ரேவதி ரமணி, பெருமாள்புரம்.



## என்ன வேகம்... என்ன திறமை!

அரசியல் அனுபவமில்லாத ராஜீவ் அனு

# நல்லதாப் போச்சு!

...ப வோட்டுக்களைப் பெற்றுப் பிரதமராவது நாட்டுக்கு நல்லதல்ல என்று நினைத்து அவர் வெற்றிபெறக்கூடாது என்றே விரும்பினேன். ஆனால் இப்போது அவருடைய வேகத்தையும் விவேகத்தையும் திறமையையும் பார்க்கும் போது, 'நல்லவேளை நான் நினைத்தது நடக்காமல் போனதே நல்லதாப்போச்சு!' என்று மகிழ்கிறேன்.

— பி. ஆர். ஸ்ரீனிவாசன், நகரம் (வ. ஆ.)

## நினைத்தாலே நடுங்குகிறது!



கனடாவிலிருந்து இந்தியா திரும்புவதற்காக எனக்கும் என் மகனுக்கும் இரண்டு விமான டிக்கெட்டுகள் வாங்கியிருந்தேன். பிரயாணம் செய்வதற்கு இரண்டு நாட்கள் முன்பு 'டோரொண்டோ' என்னும் நகரத்தில் எனது கல்லூரி நண்பன் ஒருவனை எதிர்பாராமல் சந்தித்தேன். அவன், "இன்னும் மூன்று நாட்களில் என் மகளுக்குத் திருமணம். கண்டிப்பாக நீயும், உன் மகனும் என் வீட்டிற்கு வந்து திருமணம் முடியும்வரை இருந்துதான் ஆகவேண்டும்!" என்று வற்புறுத்தவே நானும் டிக்கெட்டுகளை கேன்சல் செய்துவிட்டுச் சென்றேன். திருமணம் முடிந்த சில நிமிடங்களிலேயே நாங்கள் பயணம் செய்யவிருந்த 'கனிஷ்கா' விமானம் அட்லாண்டிக் கடலில் நொறுங்கி விழுந்த செய்தி கிடைத்தது. எங்கள் பயணம் நடக்காததே நல்லதாப் போச்சு என்றாலும் அந்த விபத்தில் இறந்த மற்ற 329 பேர்.... நினைக்கவே நெஞ்சு நடுங்குகிறது!

— சி. ஜெயபாலன், பரோடா.

## மகிழ்ச்சியான ஏமாற்றம்

எப்படியும் கல்கியில் இந்தச் செய்தி வெளிவர வேண்டும் என்று மனமார வேண்டிக் கொண்டு 'அர்த்தமுள்ள கோபம்' எழுதிக் கொண்டிருந்தேன். அப்போது காலைக் காட்சிக்கு என்னையும் அழைக்க வந்த நண்பர்கள் அதைப் பார்த்துவிட்டுக் கல்கியில் அது பிரசுரமானால் அனைவருக்கும் டிபன் வாங்கித் தரவேண்டும் என்றார்கள். நானும் அவசரத்தில் 'சரி' சொல்லிவிட்டேன். 27.10.85 இதழைப் பார்த்த பிறகுதான், 'நல்லவேளை அது பிரசுரமாகாமல் போனதே நல்லதாப்போச்சு' என்று எண்ணி ஆறுதல் அடைந்தேன். பிரசுரமாகியிருந்தால் நாற்பது ஐம்பது என்று டிபனுக்கு அழுதிருக்க வேண்டுமே!

— ஆர். சனிச்சாமி, திண்டுக்கல்.

## உயிர் காத்த வாக்குவாதம்!

போபாலில் வேலை பார்த்து வந்த நான் சென்னை வந்திருந்த போது மீண்டும் போபால் செல்வதற்காக 1.12.84 அன்று புறப்படும் ஜி. டி. எக்ஸ்பிரஸில் டிக்கெட் வாங்குவதற்காகக் கியூவில் நின்றிருந்தேன். அப்போது கியூவில் எனக்குப் பின்னால் நின்றிருந்தவரோடு எனக்கு வாக்குவாதம் ஏற்பட்டதால் என் இடம் பறிபோனது. மறுபடியும் கியூவின் கடைசியில் சென்று டிக்கெட் வாங்கச் சென்றபோது அந்தத் தேதி வரை டிக்கெட் இல்லை என்று சொல்லிவிட்டார்கள். அன்று மட்டும் டிக்கெட் கிடைத்திருந்து நான் சென்றிருந்தால் 2.12.84 அன்று போபாலில் ஏற்பட்ட விஷவாயுவில் சிக்கி மாண்டு போயிருப்பேன்.

— ஆர். பார்த்தசாரதி, மங்களூர்.



## டீ. வி. யால் வந்த வேலை

கலர் டீ. வி. வாங்குவதற்காகப் பணம்

பசமித்து வைத்திருந்தோம். வாங்கும் நாளை யும் ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந் தோம். என் கணவருக்கு ஆபீஸில் ஆடிட்டிங் இருந்ததால், வாங்குவது நாள் தள்ளிக் கொண்டே போனது. அந்தச் சமயத்தில் தான் என் மச்சினருக்கு ஒரு நல்ல வேலை யில் செக்யூரிட்டி டெபாசிட் கட்டிச் சேரும் உத்தரவு வந்தது. கலர் டி. வி.க்கான பணத் தைக் கட்டி அவர் வேலையில் சேர்ந்தார். டி. வி. வாங்காததும் நல்லதாகவே முடிந் தது.

— திருமதி. எஸ். லீலாவதி, சென்னை—90.

## சினிமாவால் வந்த ஆபத்து!




'முந்தானை முடிச்சு' படத்தை எப்படி யாவது பார்த்தே தீரவேண்டும் என்ற வெறியோடு ஒருநாள் வீட்டைப் பூட்டிக் கொண்டு மனைவியுடன் இரவுக் காட் சிக்குச் சென்றேன். தியேட்டரில் டிக் கெட் கிடைக்காமல் போகவே ஏமாற்றத் துடன் வீடு திரும்பினேன். அப் போது பூட்டியிருந்த வீடு திறந்து கிடந் தது. பரபரப்புடன் உள்ளே சென்ற போது ஒருவன் எங்களை இடித்துத் தள்ளிக் கொண்டு வெளியே ஓடிவிட் டான். 'திருடன்' என்று கூவுமுன்பே மறைந்து விட்டான். டிக்கெட் கிடைக் காததே நல்லதாய்ப் போயிற்று என்று மகிழ்ந்தோம்.

— வி. ஜெயபால், சேலம்—6.

## இப்போது நினைக்கிறேன்!

1950 ஆம் ஆண்டு நான் எஸ். எஸ். எல். ஸி. முடித்த நேரம். தொடர்ந்து படிக்க முடியாததால் சிம்சன் கம்பெனியில் டைம் கீப்பர் வேலைக்கு விண்ணப்பித்தேன். அதிபர் திரு. அனந்தராமகிருஷ்ணனைச் சந்திப்பதற் காகச் சைதாப்பேட்டையிலிருந்து ஜெமினி வரை பஸ்ஸிலும் பிறகு நடையாகவும் சுமார் பத்து முறையாவது சென்றிருப்பேன். பிறகு அவர், 'நீ ஆபீஸ் பையனாகவும் டைம் கீப்ப ராகவும் இருக்க வேண்டியவனல்ல. அப்பா விடம் சொல்லிப் படி' என்று அறிவுரை கூறினார். நானும் வேறுவழியின்றிக் கஷ்டத் தோடு கஷ்டமாகப் படித்து ஆசிரியராகித் தலைமையாசிரியராகவும் உயர்ந்து நல்லாசிரி யர் விருதும் பெற்றுவிட்டேன். இப்போது அதிபர் திரு. அனந்தராமகிருஷ்ணனைத்தான் நினைத்துக் கொள்கிறேன்.

— ஆர். பி. சாரதி, சென்னை—44.

## அப்பாடா தப்பித்தேன்!

ஆசிரியர் பயிற்சி முடித்துவிட்டு வேலை கிடைக்காமல் இருந்தபோது, கோயமுத்தூரிலுள்ள ஒரு தனியார் பள் ளியில் இருந்து எனக்கு இண்டர்வியூ வந்தது. எப்படியும் அந்த வேலை கிடைத்து விடும் என்று ஆவலோடு இருந்த போது எனக்குத் திடீரென்று காய்ச்சல் வந்து விட்டதால் இண்டர்வியூவுக்கே போக முடியாமல் போனது வருத்தமாக இருந்தது. சில மாதங்கள் கழித்து அந்தப் பள்ளி ஒரு போலியான அமைப்பு என்றும் ஒரு சில காலிகள் அப்படியோர் அமைப்பை ஏற்படுத்தி இளம் பெண்களை ஏமாற்ற முயற்சி செய்ததாகவும் தகவல் வந்தபோது, 'அப்பாடா!' என்று நிம்மதியடைந் தேன்.

— டி. பழனியம்மாள்,
வேலூர் (சேலம்).



ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி.ஐ.பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

A. தங்கசாமி,
வி. டி. ஏ. ஹவுஸ்,
பொத்தனூர் (அஞ்சல்),
சேலம்—638 181.



புது வருஷத்தில் உங்கள் எல்லோருக்கும் என் நல்லாசிகள்

# ஸ்ரீ ஜய ஹனுமான் கூறுகிறார்



அகில உலகமும் கடந்த 10 ஆண்டுகளாகப் பூஜித்தவர்களுக்கெல்லாம் நல்ல பலனையும், அருளையும் அள்ளிக் கொடுத்து வரும்

**ஸ்ரீ காஞ்சி. பரமாச்சாரியர்கள் அருளாசி வழங்கிய**
**ஸ்ரீ ஜய ஹனுமான் வண்ணப்படம்.**
**கல்கி ஓவியர் வினு வரைந்தது.**

குறைந்த படங்களே கைவசமுள்ளன

உங்கள் கஷ்டங்கள் விலகி நினைத்த நல்ல காரியம் நடக்க இன்றே கீழ்க்கண்ட முகவரிக்கு முன்னதாகப் பணம் அனுப்பி புதுவருடத்தில் பூஜையைத் தொடங்குங்கள். அளவு, விலை $13\frac{1}{2} \times 20''$ ரூ. 7., $9\frac{1}{2} \times 15''$ ரூ. 5. (பூஜைப் புத்தகத்துடன்) பாக்கிங் உட்பட பதிவுத்தபால் செலவு ரூ..7 கூடுதல் பதிவுத்தபால் செலவும்/ தபாலும் சேர்த்துப் பணம் அனுப்பவும். வி. பி. பி. இல்லை. 50 படங்களுக்கு 20% தள்ளுபடி உண்டு.

ஸ்ரீமதி சரஸ்வதி வெங்கட்ராமன் W/o. வினு (கல்கி)
16, வேலாயுத முதலி தெரு, நுங்கம்பாக்கம்,
சென்னை—600 034. போன்: 479191
(வள்ளுவர் கோட்டம் பஸ் ஸ்டாப் அருகில்)

நேரில் மட்டும் கிடைக்கும் இடம்
ரணேராஜ் ஏஜன்ஸீஸ்,
32/169 எடையர் தெரு (மேற்கு)
கோயமுத்தூர்—641 001

# மார்கழி மாதத்தில் பக்தி புத்தகம் வெகுமதி

எங்களிடம் வாங்கப்படும் இனிப்பு, கார தின்பண்டங்களின் தொகைக்கு தகுந்தபடி வேதாந்த சமய நூல்கள் அல்லது பத்திரிகைக்கு ஒரு வருட சந்தா இனாமாக வழங்கப்படும்.

இனிப்பு வகைகள்: மங்களூர் போளி, தேங்காய்ப் போளி, ரஸமலாய் சோன்பப்படி, மாலடு, பாம்பே காஜா, ஸ்வீட் சோமாஸ், முந்திரிக் கதளி, வேர்கடலை உருண்டை, பொரி விளங்காய் உருண்டை, தேங்காய் கோவா, கோதுமை அல்வா முதலியன.

கார வகைகள்: தட்டை, தேன்குழல், கைமுறுக்கு, சீடை, ஸ்பெஷல் மிக்சர், சீப் சீடை, உருளைக்கிழங்கு சிப்ஸ், வாழைக்காய் சிப்ஸ், முள்ளு தேன் குழல், வறுபயறு ரயில் கட்டம், நவரத்தின மிக்சர், ரிப்பன் பக்கோடா, வெஜிடபுள் சமோசா முதலியன.

பொடி வகைகள்: கருவேப்பிலை பொடி, பருப்புப் பொடி, இட்லிப் பொடி, ரஸப்பொடி, சாம்பார் பவுடர், ஊறுகாய் பவுடர்.

திருமண வைபவங்களுக்கு: சீர் முறுக்கு, சீர் அதிரசம், பருப்புத்தேங்காய் திரட்டுப் பால், அப்பம் முதலியன.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் சாலை, காந்தி நகர்,
சென்னை—600 020 போன்: 412557

# மறைவாக நமக்குள்ளே

**மலர்வண்ணன்**

மணி நான்கு ஐம்பது.

பரீட்சை ஹாலில் இருந்து மாணவர்கள் ஒவ்வொருவராக வெளியே வந்து கொண்டிருந்தார்கள்.

எம். ஏ. தமிழ் மாணவர்களுக்கு அன்று கடைசிப் பரீட்சை. கல்லூரி வாழ்க்கையை முடித்துவிட்ட திருப்தியோடும், இனி எங்கே சந்திக்கப் போகிறோம் என்ற வேதனையோடும் அவர்கள் ஒன்று கூடினார்கள்.

கோடையின் வெயில் இன்னும் சூடேறவில்லை. எனவே, அந்த ஏப்ரல் மாலை ரம்மியமாகவே இருந்தது.

எப்போதோ விதைக்கப்பட்டு, கம்பீரமாக வளர்ந்துநின்ற அந்த ஆலமரத்தின் அடியில் சௌந்தர்யா உட்கார்ந்திருந்தாள்.

கண்கள் கணேசனை எதிர்பார்த்திருந்தன.

மணி ஐந்தை நெருங்கியபோது, லாங் பெல் அடித்தது. இனிமேல் பரீட்சை எழுதிக் கொண்டிருக்க முடியாது.

கணேசன் வெளியே வந்தான்.

நண்பர்கள் யாரையும் அவன் கவனிக்காமல், சௌந்தர்யாவைத் தேடிக் கொண்டு வந்தான்.

''என்ன சௌந்தர்யா, நேரத்திலேயே வந்திட்டயா?''

''எழுதி முடிச்சிட்டேன். உள்ளே என்ன வேலை?''

கணேசனும், சௌந்தர்யாவும் காதலர்கள். முதல் வருஷம் முடிந்த போது, கோடை விடுமுறைப் பிரிவைத் தவிர்க்க முடியாமல் மனத்தால் இணைந்தவர்கள்.

''ம்... இன்றைக்குக் கடைசிப் பரீட்சை முடிஞ்சாச்சு. இனிமேல் என்ன செய்யப் போறீங்க...?'' என்றாள் சௌந்தர்யா.

முழங்காலை மடித்து, கைகளால் கட்டிக் கொண்டிருந்த, அவளையே பார்த்துக்கொண்டிருந்தான், கணேசன்.

''சௌந்தர்யா, இப்படி ஒரு கேள்வி கேட்க வேண்டிய அவசியமே இல்லை. நான் தான் முதல்லேயே சொல்லிட்டேன். நான் சொன்னபடி எங்க ஊருக்குப் போயிடலாம்.''

சௌந்தர்யா நீளமாகப் பெருமூச்சு விட்டாள்.

கணேசன், தன் மனத்தைக் கவர்ந்த அந்த நாட்கள் அவன் நினைவில் முட்டின. அவன் சிலிர்த்துப் போனான்.

முதலாம் ஆண்டின், கடைசி வாரக் கல்லூரி நாட்கள்...

அப்போது 'புது நெருப்பு' வெளிவந்திருந்தது.

புது நெருப்பு — கல்லூரி மாணவர்களே நடத்தும் செமஸ்டர் இதழ் அது. ஏராளமான கவிதைகளையும், கதைகளையும் அது கொண்டிருக்கும்.

அதில், சௌந்தர்யா ஒரு கவிதை எழுதியிருந்தாள்.

ஒரு விதவையின் பெருமூச்சு, வெகுசூடாக அதில் தெளிக்கப்பட்டிருந்தது.

'கருணை' என்ற பெயரில் வெளியாகி இருந்த அந்தக் கவிதை கணேசனை மிகவும் கவர்ந்தது.

பெயருக்குக் கீழே எம். ஏ. தமிழ் முதலாம் ஆண்டு என இருக்கவே கணேசன் ஆச்சரியப்பட்டான். அந்தப் பெயரில் அவன் வகுப்பில் யாருமே இல்லை என்பதுதான் காரணம்.

குழம்பினான்.

செத்துப் போன தன் கணவரின் பண்புகளை ஒரு பெண் கூறுவதாக இருக்கவே, அதை ஒரு பெண் எழுதியிருக்க வேண்டும் என்று சரியாக யூகித்தான்.

விசாரித்த போது, அது 'சௌந்தர்யா' என்று தெரிய வந்தது.

மறுகணமே அவளைப் பாராட்ட ஓடினான். கையில் புதுநெருப்பு.

கணேசன் அவளை நூலகத்தில் சந்தித்தான்.

சௌந்தர்யா ஏதோ புத்தகத்தைத் தேடிக் கொண்டிருக்கவே, கணேசன் எட்ட நின்று அவளை ரசித்தான். கொஞ்ச நேரம்!

சௌந்தர்யா பெயருக்கு ஏற்ப அழகாகவே இருந்தாள். தாமரை நிறத்தில் பளிச் என்று துடைத்துவிட்டாற்போன்ற முகத்தோடு அவள் இருந்தாலும், அந்த முகத்தில் ஒரு சோகம் இருப்பதாகவே, தோன்றியது.

நீளமான கூந்தலைப் பின்னியிருந்தாள். லேசான நீல நிறத்தில் கச்சிதமாய்ச் சேலை உடுத்தியிருந்தாள்.

பார்த்ததும், மதிப்புத் தோன்றும்.

கணேசன் அவளோடு பலமுறை பேசியிருக்கிறான். எனவே, தைரியமாக அவளை நெருங்கினான்.

கண்களால் பருகியபடியே, ''உங்கள் கவிதை வெகு அற்புதம்!'' என்றான்.

பணத்தையும் சுமந்தபடி, நாம் வருகிறோம். செமினார் ஹாலில் நம் எல்லோரையும் உட்கார வைக்கிறார்கள். மொத்தம் பன்னிரண்டு பேர். அப்போ நீயும் நானும் நேர் எதிரில்...''

''ஞாபகம் இருக்கு!''

''சௌந்தர்யா. என்னவோ தெரியலே அப்பவே என் மனசு... உன்னை நாட ஆரம்பித்து விட்டது...''

சௌந்தர்யா அமைதியாக இருந்தாள். கணேசன் ஏதோ புத்தகத்தைத் தேடியது போல நடித்தவன், ஒரு புத்தகத்தை எடுத்து அவளிடம் காட்டினான்.

படித்தாள், மனத்துக்குள்:

'உதய மாகும் காதல் நிலா!'

'எவனோ எழுதிய கவிதைக் காதல் குப்பை!' என்கிற மாதிரி பார்த்தாள் சௌந்தர்யா.

பொலபொலவென்று கொட்ட...

''கணேஷ்... அது... அது என் கணவரின் பெயர் — கருணாகரன்...

கணேசன் குபீர் என்று வியர்த்தான். விமானத்தில் இருந்து, கீழே குதித்து, நிலத்தை நோக்கி விழுகிற மாதிரி, அதிர்ந்தான்.

''சௌந்தர்யா!''

நிறம் குறைந்த ஆடைகள். பொட்டு இல்லாத பளிச் என்ற முகம். பூவில்லாத கூந்தல். சோகமான முகம் — கணேசன் ஒவ்வொன்றாக உணர்ந்த போது, துடித்துப் போனான்.

'பாவி மகளே, அது உன் சொந்தக் கதையேதானா?'

''கணேஷ்... இதை நான் யார் கிட்டேயும் சொல்ல விரும்பலே. அதனாலேதான்,...''

''பரவாயில்லை சௌந்தர்யா. மறைக்க வேண்டிய விஷயங்களை மறைப்பதில் தப்பே இல்லை. ,எல்லாவற்றையும் எல்லோருக்கும்





சௌந்தர்யா புன்னகை புரிந்தாள். மூன்றாம் பிறைச் சந்திரன் அளவுக்கு விரிந்த இதழ்கள் சட்டென்று மூடிக் கொண்டன.

ஆனால் அந்தக் கண்கள்? அவனை ஆசையோடுதானே பார்க்கின்றன?

மனத்துக்குள் இளையராஜாவின் இசையும், பாரதிராஜாவின் வெள்ளை உடைப் பெண்களும் குதூகலிக்க, கணேசன் அவளையே பார்த்தான்.

''சௌந்தர்யா, ஒரு நிமிஷம் பேசலாமா?''

''ம்!'' எதிர்பார்த்தவளைப் போல் ரகசியமான குரலில் சொன்னாள், சௌந்தர்யா.

''இந்த வருஷம் முதல் நாள் உனக்கு ஞாபகம் இருக்கா?''

''......''

''அன்றைக்கு இண்டர்வியூ கார்டோடு,

கணேசன் புரிந்து கொண்டான். 'இவள் திடீரென்று மாறிப் போனாள்!'

அவளும் ஏதாவது ஒரு கவிதைப் புத்தகத்தைத் தேடி, தன் சம்மதத்தைத் தெரிவிக்கும்; பொருத்தமான தலைப்பைக் காட்டுவாள் என்று எதிர்பார்த்தவன் நிறையவே ஏமாந்து போனான்.

சௌந்தர்யா, அமைதியாக, தலையைக் குனிந்தபடி நிற்கவே, கணேசன் பேச்சை மாற்றினான்.

'இவளை விட்டுப் பிடிப்போமே! இவள் என்னை நேசிக்கிறாள். அது எனக்கு நன்றாகத் தெரியும். பிறகு என்ன?'

''சௌந்தர்யா—புதுநெருப்பு கவிதையைக் கருணா என்கிற பெயரில் எழுதியிருக்கே, அது என்ன பெயர்? யாரோட பெயர்...?''

சௌந்தர்யாவின் கண்களில் கண்ணீர்

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச க்ரீம் (செவ்விள மஞ்சள்),
டெஸர்ட் ப்ரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

சொல்லிக்கொண்டிருக்க முடியுமா, என்ன?"

சௌந்தர்யா பெருமூச்சு விட்டாள்.

"கணேஷ். நான் பி. ஏ. பரீட்சை எழுதின மறு வாரமே எனக்கும் அவருக்கும் கல்யாணம் நடந்தது. ஆனா... ஆனா... என் பரீட்சை ரிசல்ட் வந்தப்போ நான் விதவை ஆயிட்டேன். ஒரே மாசம்தான் அவரோடு வாழ்ந்தேன். ஒரு விபத்தில் போயிட்டார்..."

ஒரு நிமிஷம் அமைதி.

"சௌந்தர்யா, பழசை ஏன் நினைக்கறே? எல்லாவற்றையும் மறந்து படிக்க வந்திருக்கே. இதையும் மறந்திடு. நான் சொன்ன வார்த்தை சொன்னதுதான். நான் நேசிக்கறது உன்னோட உடலையா என்ன, உள்ளத்தைத்தான். அது எனக்கு... எனக்கே எனக்கு... எனக்கு மட்டுமே கிடைக்கும் என்கிற நம்பிக்கை எனக்கு உண்டு..."

கணேசன், எந்தத் தயக்கமும் இல்லாமல் இப்படிச் சொன்னதும் சௌந்தர்யா குளிர்ந்து போனாள்.

மறுமண எண்ணம் மல்லிகையாய் மணக்க, எம். ஏ. படிக்க வந்தவள் கணேசனைச் சந்தித்ததும், மாலே சூட முடிவெடுத்தாள்.

கணேசனுடைய ஆண்மையை அவள் மிகவும் நேசித்தாள்.

ஒரு விதவையை... இரண்டே மாதத்தில்.. எண்ணி அறுபத்து ஒரு நாட்களில் கணவனை இழந்த ஒரு அதிர்ஷ்டம் கெட்டவளை மணக்க முன் வருவது அப்படி என்ன லேசுப்பட்ட காரியமா?

அந்தக் காரியத்தைச் செய்யக் கணேசன் தயார் என்றான்.

கருணாகரன் பிடியில் அணைந்து கிடந்த நாட்களைப் பற்றிக் கூட அவள், அவனிடம் சொன்னதுண்டு.

லேசாய்ப் புன்னகை செய்வான்.

எவ்வளவு பெருமைக்கு உரியவன் இவன்? ஊரும் உலகமும் சும்மா விடுமா?

எதிரிகள் கிண்டல் செய்வார்கள்.

"ம்... கட்டை ஜோராகத்தான் இருக்கான். இவன் மயங்கிட்டான்..."

"இவனுக்கு என்னடா தலையெழுத்து? வேறு பொண்ணு கிடைக்கலே?"

"ஏண்டா, மாட்டைத் தனியாத்தான் வாங்கி வந்திருக்கானா? இல்லே கண்ணுக்குட்டி, கிண்ணுக்குட்டி உண்டா?"

நண்பர்கள் மட்டும் சும்மா விட்டுவிடுவார்களா?

'கணேஷ், நீங்க தைரியசாலி. ஒரு விதவைப் பெண்ணைக் கல்யாணம் செய்து, அவளை வாழ வைக்கிற தெய்வம். சரியான ஆண் மகன். ஒரு ஆண் மறுமணம் செய்து கொள்வதை அனுமதிக்கும் உலகம், ஒரு பெண் மறுமணம் செய்து கொள்வதை எதிர்ப்பதா? அந்த எதிர்ப்பை நான் பொருட்படுத்துவதா என்று, இந்த உலகத்தின் அறியாப் பேச்சை எதிர்க்கத் துணிந்த என் இனிய காதலனே, நீ தான்... நீ மட்டும்தான், சரியான ஆண் மகன்...'

"என்ன சௌந்தர்யா, எங்கே



## வெற்றிக்கு ஒரு வழி

**போட்டி : 36**

அலுவலகத்தில், தொழிலகத்தில், ஆய்வுக்கூடத்தில் அல்லது வீட்டில் கூட எத்தனையோ விஷயங்களைத் திட்டமிட்டு முன்னேற முயல்கிறோம். அதற்கு ஒரு முட்டுக்கட்டை அல்லது தடங்கல் வரும்போது அதனை ஏதேனும் ஒரு வழியைக் கையாண்டு வெற்றி கண்டு வாழ்க்கைப் பாதையில் மேலே செல்கிறோம். அப்படி உங்களுக்கு ஏற்பட்ட ஓர் அனுபவத்தைக் கீழேயுள்ள வெற்றிடத்தில் சுருக்கமாக எழுதி இந்த அரைப்பக்கத்தை மட்டும் முழுமையாகக் கத்தரித்து எங்களுக்கு அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர, குலுக்கல் முறையில் ஒருவருக்கு வி. ஐ. பி. ஸூட்கேஸ். உறையின்மேல், 'வெற்றிக்கு ஒரு வழி' என்று கட்டாயம் குறிப்பிட வேண்டும்.

**முடிவு தேதி : 20.1.86**

**வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெற்று ஒரு வி. ஐ. பி. ஸூட்கேஸையாவது பெற முயற்சி செய்யுங்கள். இன்னும் 17 ஸூட்கேஸ்களே பாக்கி இருக்கின்றன.**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

**வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்**

ஹார்லிக்ஸ் எங்களுடைய குடும்ப நண்பன். ஆபீஸிலிருந்து களைப்புடன் திரும்பிவரும் என் கணவருக்கு, காலேஜ் மற்றும் டான்ஸ் கிளாஸை முடித்துக் கொண்டு வரும் என் பெண்ணிற்கு, ஸ்கூல் முடிந்து திரும்பும் ஃபுட்பால் வீரனை என் பையனிற்கு—ஏன், தினமும் கடைகண்ணி போய் திரும்பும் எனக்கும்தான்—ஹார்லிக்ஸின் துணை ரொம்ப முக்கியம். எங்கள் குடும்பத்தின் நலனிற்காக நான் ஹார்லிக்ஸையே நம்புறேன்.

மால்டெட் பார்லி, முழு ஆடைப் பால் மற்றும் பொன்னிற கோதுமைக்கொண்ட ஹார்லிக்ஸ் ஒரு சுவையான, சத்தான பானம். ஊட்டச்சத்திற்கு மூலாதாரமான ஒரு லட்சிய பானமென்ற நம்பிக்கையை பெற்றது. எனவே, கடந்த 80 வருடங்களாக கோடிக்கணக்கான குடும்பங்கள் உலகமெங்கும் ஹார்லிக்ஸின்மேல் நம்பிக்கை வைத்து வருகிறார்கள் என்பதில் ஆச்சரியமில்லை.

Horlicks

The Great Nourisher

புதிய காலத்திற்கேற்ப புதிய தோற்றம்

EMPORIUM

## சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்



# அண்டலையே!

வறுமை தாளாது
உன்னை வணங்கி
சாப்பிட்ட
விஷத்தில்
கலப்படம்!
வாழ்வில்
கைகொடுக்காத நீ
சாவிலும்
கைவிட்டுவிட்டாயே!
வெளியே சொன்னால்
இது உன் கருணை
என்பார்கள்!

— சி. ஜெயராம்.

போயிட்டே... ஹலோ, இங்கேதானே இருக்கே?''

கணேசன் விரல்களைச் சொடுக்கிக்கிண்டலாகக் கேட்கவும், சட்டென்று பழைய நினைப்பை விடுத்துச் சுய நினைவுக்கு வந்தாள், செளந்தர்யா.

''என்ன ஆச்சு உனக்கு? ஏன் இவ்வளவு பெரிய பெருமூச்சு?''

செளந்தர்யா மெதுவாகப் பேசினாள்:

''கணேஷ்... நம்ம படிப்பு முடிஞ்சு போச்சு. காலையிலே ஊருக்குப் புறப்படணும். இனிமேல் நம்ம வாழ்க்கை... எதிர்காலம்...''

''பிரகாசமாக இருக்கும். கவலைப்படாதே!''

''இல்லே கணேஷ். நாட்கள் நிறைய இருக்கு என்கிற தைரியத்தில் நாம் அதிகமாகச் சிந்திக்கவில்லை. இப்போ கடைசி நிமிஷத்திலே இருக்கோம். நிறையச் சிந்திக்கத் தோணுது!

''நான் ஒரு விதவை. உங்க பெற்றோரும், ஊராரும் என்னை எப்படி ஏற்றுக்கொள்ளப் போறாங்க? கணேஷ், எனக்காக நீங்க செய்யப் போற தியாகங்களைப் பற்றி நினைச்சுப் பார்க்கற போது...''

"அழாதே செளந்தர்யா. அப்படி எதுவுமே நடக்காது. அதற்கு நான் ஒரு திட்டம் வச்சிருக்கேன். கவலையே வேண்டாம்!''

''திட்டமா?''

''ஆமா. நான் சொல்றதைக் கவனி. உன்னோட சொந்த ஊர் ஊட்டி. என் சொந்த ஊர் தஞ்சாவூர். ஒரு குக்கிராமத்தில் விவசாயம். நாம் படிக்கிறதோ கோயமுத்தூர். இந்தத் தூரம்தான் நமக்கு ஆதாயம்!''

''......''

''ஊருக்குத் தெரிந்தால் அவமானம் என்று நீ நினைக்கிறது உண்மைதான். நாலு பேர் நாலு விதமாகப் பேசுவாங்க. என்னோட அப்பா அம்மா கூட ஏதாவது தகராறு செய்வாங்க. அதனாலே அந்த விஷயத்தையே மறைச்சிடலாம்.''

''......''

''எனக்கு நீ வேணும். ஆனால் நீ விதவை என்பது யாருக்கும் தெரியாமல் வேணும். என்னோட பெற்றோர் சம்மதம் எனக்குக் கண்டிப்பாகக் கிடைக்கும். ஒரு கோயில்லே கல்யாணம் செய்துக்கலாம். உன்னோட அப்பா அம்மா கூட வேண்டாம். யாரும் இல்லே என்று சொல்லிடலாம்.''

''......''

''ஆமா, நீ விதவை என்கிறது யாருக்குமே தெரியக் கூடாது. தெரிந்தால் அது நம் எதிர்காலத்தை நிச்சயமாகப் பாதிக்கும். நாலு பேர் மத்தியில் நடக்கிற போது பெரிய அவமானமாப் போயிடும். என்ன செளந்தர்யா, பேசவே மாட்டேன் என்கிறே...?''

செளந்தர்யா வேகமாக எழுந்தாள்.

''கணேஷ்... எனக்கு என்ன சொல்றதுன்னே புரியலே. நீங்க ஒரு கோழை. ஒரு விதவையைக் காதலிக்கத் தெரிஞ்ச உங்களுக்கு, ஊர் அறிய அவளை ஏற்றுக் கொள்ளும் தைரியம் வரலே. விதவை என்பதையே மறைக்க நினைக்கறீங்க! உங்க ஆளுமை — பர்சனாலிடி அங்கே பாதாளத்தில் விழுந்து நொறுங்கிப் போச்சு. இதை நான் எதிர்பார்க்கலே. ஊருக்குத் தெரிந்தால் அவமானம் என்கிறீங்க! நம்ம கல்யாணத்துக்குப் பிறகு எப்படியாவது விஷயம் வெளியே வருது என்று வைத்துக் கொள்வோம். அப்போ என்ன செய்வீங்க? இந்த அவமானத்தை எப்படித் துடைப்பீங்க? ஒருவேளை, 'இவள் விதவை என்று எனக்கே தெரியாது. பாவி மகள் என்னை ஏமாற்றி விட்டாள்' என்று துரத்தி அடிப்பீங்களோ? அவமானம் என்ற நீங்க அதைத்தானே செய்வீங்க? ஒரு விதவையை மணந்திருக்கிறேன் என்று மார் தட்ட வேண்டாம். (அதுவும் தப்புதான்). அவள் விதவை என்று தெரிவதனால் எனக்குக் கவலை இல்லை. அறியாமல் பேசும் ஊராரின் வாய்க்கு நான் பயப்படவில்லை என்று நினைக்க வேண்டியவர் நீங்கள். என்னை மணப்பதால் அவமானம் வரும் என்று எந்த நிமிஷம் நினைச்சீங்களோ, அந்த நிமிஷமே என்னை இழந்துட்டீங்க! கணேஷ்... என்னை எவ்வளவோ பேர் விதவை என்பதால் எட்டி நின்று கேவலப்படுத்தியிருக்காங்க. ஆனால் நீங்கள்... கிட்ட நின்றே ரொம்ப ரொம்பக் கேவலப்படுத்திட்டீங்க! இந்தத் தழும்பு என்றைக்குமே ஆறாது...''

செளந்தர்யா பொங்கி வந்த அழுகையை அடக்க முடியாமல், ஹாஸ்டலை நோக்கி ஓட, கணேசன் சிலையாக, இல்லை வெறும் கல்லாக நின்றான்.

# உணர்வுகள் உறங்குவதில்லை

23. சாந்தி.

காலையில் செய்தித் தாளைப் பிரித்து முதல் பக்கத்திலிருந்த செய்தியைப் பார்த்து விட்டுப் பதறி எழுந்து உட்கார்ந்தார் சந்திர சூடன்.

அடகுக் கடை சேட், கொலை செய்யப் பட்டு, கடைக்குள் கிடந்ததாகவும், ஒன்றரை லட்சம் ரூபாய் கொள்ளையடிக்கப்பட்டதாக வும் செய்தியிருந்தது.

சந்திரசூடனுக்கு உள்ளூர நடுக்கம் எடுத் தது. முத்துராமன் வேலை பார்க்கும் கடை அது. அவருக்கு இருப்புக் கொள்ளவில்லை. உடனே முத்துராமனைக் காண வேண்டு மென்னும் துடிப்பு. சட்டையை அணிந்து கொண்டு புறப்பட்டபோது, குமார் பரபரப் புடன் உள்ளே வந்தார்.

''முத்துராமன் இதைச் செய்யாமல் இருந் திருந்தால் நல்லது. இல்லையென்றால் நம் இருவருடைய பெயர்தான் உருளும். அவன் வீட்டிற்குத்தானே? வா, நானும் வருகிறேன்'' என்றார் குமார்.

இருவரும் குமாரின் ஸ்கூட்டரில் முத்து ராமனின் வீட்டிற்குச் சென்றனர். இவர்கள் சென்றபோது முத்துராமன் வீட்டில்தான் இருந்தான். இவர்களைக் கண்டதும் அவனு டைய முகத்தில் பீதி தோன்றியதைக் குமார் கவனித்தார்.

''வாங்க சார், வாங்க சார்'' என்று இவர் களை வரவேற்றான். ''பேப்பரில் செய்தியைப் பார்த்துவிட்டு என்னைத் தேடி வந்துவிட்டீர் களோ?'' என்றான். ''அதிகாலையில் போலீஸ் என்னை அழைத்துப் போய் விசா ரித்துவிட்டார்கள்'' என்றான் முத்துராமன்.

''கொலை எப்படியாம்?'' என்று கேட்டார் குமார்.

''தெரியவில்லை. நேற்று இரவே கொலை செய்யப்பட்டுக் கடைக்குள் கிடந்தாராம்'' என்றான் முத்துராமன்.

சந்திரசூடன் நீண்ட பெருமூச்சுவிட்டார். ''இவனைச் சந்தேகித்தாயே'' என்பதுபோல், குமாரை அலட்சியமாகப் பார்த்தார்.

''நீ எப்போது கடையிலிருந்து வந்தாய்?'' என்று கேட்டார் குமார்.

''ஏன்? சேட் கொலையுண்டபோது நான் எங்கே இருந்தேன் என்பதைத் தெரிந்து கொள்ளவா?'' என்று கோபத்துடன் கேட் டான் முத்துராமன்.

''அதற்கில்லை. பொதுவாகக் கடை ஊழி யர்கள் எப்போது வெளியேறுவீர்கள்; சேட் எப்போது வீட்டுக்குப் போவார் என்பதை அறியத்தான் கேட்டேன்'' என்றார் குமார்.

''எல்லா விவரத்தையும் போலீஸிடம் சொல்லிவிட்டேன். கடை ஊழியர்கள் எல் லாரையும் விசாரித்துவிட்டார்கள். உங் களுக்குச் சந்தேகம் ஏதுமிருந்தால் போலீஸ் ஸ்டேஷனில் விசாரித்துக் கொள்ளுங்கள்'' என்றான் முத்துராமன் கோபத்துடன்.

''இதில் உனக்கு ஏதும் சம்பந்தம் இல்லை என்பது எங்களுக்கு சந்தோஷந்தான்'' என்ற படியே குமார், அங்கிருந்து நகர்ந்தார். சந்திர சூடனும் விடை பெற்றுக் கொண்டு நகர்ந் தார். அப்போது முத்துராமன் சொன்னான்.

''என்மீதுதான் உங்களுக்குச் சந்தேகம் வரும். ஆனால் நீங்கள் யோக்கியன் என்று நினைத்துக் கொண்டிருக்கும் ஆள், என்ன வேலை செய்திருக்கிறார் தெரியுமா?''—இதைக் கேட்டு இருவரும் நின்று அவனைத் திரும்பிப் பார்த்தனர்.



ர. சு. நல்லபெருமாள்

''யாரைச் சொல்லுகிறாய்?'' என்று கேட்டார் சந்திரசூடன்.

''உங்கள் கோயில் பூசாரியைத்தான். ஒரு பெண்ணைக் கற்பழிக்க முயற்சி செய்திருக்கிறார்.''

''அடப்பாவி.... ஒரு மகானைப் பற்றி உளறுதே'' என்று இரைந்தபடி கோபத்துடன் அவனை நெருங்கினார் சந்திரசூடன்.

''உண்மைதான் சார். இன்று காலையில் போலீஸ் நிலையத்தில் எங்களை விசாரித்துக் கொண்டிருந்தபோது ஒரு பெண் சக்தி சிவத்தைப் பற்றி இப்படிப் புகார் சொல்லிக் கொண்டிருந்தாள்'' என்றான் முத்துராமன்.

''வா, நாம் ஸ்டேஷனுக்குப் போய் விசாரிக்கலாம்'' என்று அவருடைய கையைப் பற்றி இழுத்துச் சென்றார் குமார்.

சந்திரசூடன் மனம் குழம்பிப் போயிருந்தார். பேச்சற்றுப் போயிற்று.

இருவரும் போலீஸ் நிலையத்தை அடைந்ததும் இன்ஸ்பெக்டர் சந்திரசூடனைப் பார்த்து, ''உங்களைப் பார்க்கத்தான் கிளம்பிக் கொண்டிருக்கிறேன். உங்களுக்கும் விஷயம் தெரிந்து விட்டதா?'' என்றார்.

''எந்த விஷயம்?''



''உங்கள் கோயில் பூசாரி, ஒரு ரேப் கேஸில் மாட்டியிருக்கிறார்.''

''அப்படி இருக்க முடியாது.''

''அந்தப் பெண்ணே புகார் கொடுத்து விட்டுப் போயிருக்கிறாள். அவளைப் பரி சோதனைக்கு ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிட் டோம். உடனே பூசாரியைக் கைது செய்யத் தான் நினைத்தேன். இருந்தாலும் போகிற வழியில் உங்களுக்குத் தகவல் சொல்லி விட்டுச் செல்வோமே என்று நினைத்தேன்.''

''இது உண்மையாக இருக்க முடியாது சார்.''

''வாருங்கள் கோயிலுக்குப் போகலாம். பூசாரி என்ன சொல்கிறார் என்று பார்க்க லாம். இந்தக் காலத்தில் இந்த மாதிரி ஆட் களை நம்ப முடியாது சார்.'' என்று எழுந்தார் இன்ஸ்பெக்டர். ''இன்று விடியும்பொழுதே நேரம் சரியில்லை. அடகுக்கடை சேட்டை யாரோ கொலை செய்துவிட்டு ஒன்றரை லட் சத்தைக் கொள்ளையடித்துவிட்டார்கள். அடுத்தது இந்தக் கேஸ்'' என்று அலுத்த படியே வாசலை நோக்கி நடந்தார்.

எல்லாரும் போலீஸ் காரிலேயே கோயி லுக்குச் சென்றனர். சந்திரசூடன் மிகுந்த அதிர்ச்சிக்குள்ளாகியிருந்தார்.

அடிக்கடி இரவு நேரங்களில் பாதச் சலங்கை, ஒலிக்க அம்மன் கோயிலுக்குள் நடமாடுவதாகவும், சக்திசிவத்துடன் சிரித்து விளையாடுவதாகவும், ஓடி மறைவதாகவும் சக்திசிவம் கூறியிருக்கிறாரே; அவை உண்மை தாம் என்றால்....

ஓ.... இதெப்படி? சக்திசிவமா இப்படி...? எப்படி நம்புவது? ஒருவேளை அவர் அந்தப் பெண்ணை அம்மனாக எண்ணிக் கொண்டு.... அப்படியும் நடந்திருக்குமோ.....?

இன்ஸ்பெக்டரிடம், ''சார், அந்தப் பெண் யார்?'' என்று கேட்டார் சந்திரசூடன்.

''உங்கள் கோயில் ஊழியன் பக்கிரிசாமி இருக்கிறானே, அவனுடைய மனைவிதான். இன்று அதிகாலையில் அவள் கோயிலைப் பெருக்கிக் கொண்டிருந்தபோது பூசாரி அவளைப் பலாத்காரம் செய்ய முயன்றிருக் கிறார். அவள் எப்படியோ தப்பித்து ஓடி வந்துவிட்டாள். வளையல்கள் உடைந்து, சேலையும் ரவிக்கையும் தாறுமாறாகக் கிழிந்து போய் வந்து நின்றாள்'' என்றார் இன்ஸ்பெக் டர்.

போலீஸ் கார், கோயில் வாசலில் நின்ற தும் சந்திரசூடன் முதலில் கீழே இறங்கி னார். ''சார், தயவு செய்து கொஞ்சம் பொறுங்கள். நான் முதலில் உள்ளே போய் அவரைச் சந்தித்துக் கூட்டி வருகிறேன். தயவுசெய்து எனக்காகக் கொஞ்சம் பொறுத் திருங்கள்'' என்றார்.

அப்போது எல்லோருடைய கவனமும் கோயிலுக்குள் சென்றது. கோயிலினுள் மூலஸ்தானத்தில் எல்லா விளக்குகளும் எரிந்து கொண்டிருந்தன. அம்மன் சர்வா லங்கார பூஷிதையாகக் காட்சியளித்தாள். சக்திசிவம் புத்தாடை உடுத்திக் கர்ப்பக் கிருஹத்தை நோக்கிச் சென்றது தெரிந்தது.

''அதோ சக்திசிவம் போகிறார். நான் போய் அழைத்து வருகிறேன். உள்ளே வந்து முன் மண்டபத்தில் இருங்கள்'' என்று கூறி விட்டுச்சந்திரசூடன்கோயிலினுள்சென்றார்.

எல்லாரும் உள்ளே சென்று முன் மண்ட பத்தில் நின்றனர். சக்திசிவம் கர்ப்பகிருஹத் திற்குள் சென்று கதவைச் சாத்தியதைக் கண் டனர்.

எல்லாரும் திண்ணையில் அமர்ந்தனர். கோயில் வாசலில் போலீஸ்காரரைக் கண்ட தும் கூட்டம் கூடத் தொடங்கியது. யாரையும் கோயிலுக்குள் வரவிடாமல் போலீஸ்காரர் கள் தடுத்துக் கொண்டிருந்தனர்.

சந்திரசூடன் பதற்றத்துடன் கர்ப்பக் கிருஹத்தை நெருங்கினார். கதவு சாத்தியிருந் தது. உள்ளே மணியோசை கேட்டது. சற்றுப் பொறுத்திருந்தார். மணியோசை நிற்க வில்லை.

இவ்வளவு நேரமாகவா நிவேதனம் நடை பெறுகிறது....

திடீரென்று கர்ப்பக் கிருஹத்திற்குள் பல மணிகள் சேர்ந்து ஒலிக்கத் தொடங்கின சந்திரசூடன் குழம்பினார். உள்ளே எப்படி அத்தனை மணிகள் ஒலிக்க முடியும்? கதவு இடுக்கின் வழியாகச் சந்திரசூடன் பார்த்த போது அதிர்ந்துவிட்டார்!

உள்ளே ஒரே ஒளிமயம். சூரியனே இறங்கி வந்து கர்ப்பக் கிருஹத்தினுள் புகுந்துவிட் டதுபோலிருந்தது. ஆனால் அந்தப்பேரொளி, கண்ணைக் கூசச் செய்யாமல் குளுமையாக இருந்தது. மணிகளின் ஒலி தொடர்ந்து ஒலித் துக் கொண்டிருந்தது. சந்திரசூடனின் பார்வை அம்மன் சிலை மீது திரும்பியபோது திகைப்புற்றவராய் பார்த்தபடியே நின்றார்.

உள்ளே அம்மன் பாதங்களை சக்திசிவம் கட்டியணைத்தவாறு இருந்தார். புது வேட்டி உடுத்தி, உடம்பில் சந்தனம் பூசியிருந்தார். உள்ளிருந்து ஓர் அபூர்வ மணம் வீசியது.

''எங்க மானேஜர் சின்னப் பசங்களை நடத்தற மாதிரி எங்களை நடத்தறார்.''

''எப்படி?''

''ஏதாவது தப்புப் பண்ணினால் எங் களோடு 'டு' விட்டுவிடுவார்.

— இளை அ. கதிர்வேல்.



தமிழ்ப் பெரியார் திரு. வி. க., கண் பார்வை மங்கிப் போய்ப் படுக்கையிலிருந்தபொழுது, அருகில் இருந்தவரிடம், ''கால அளவினைக் கடிதே நோக்குக'' என்றார்.

மணி பார்த்தவர், ''அஞ்சு முகனொடு ஆறுமுகனும், அவன் குஞ்சுமணியினொடு குகனும்'' என்றார். மணி என்னவென்று தெரிகிறதா?

அஞ்சு முகன் — 5, ஆறுமுகன் — 6, குஞ்சுமணி — ½ — குகன் — ¼ — பதினொன்றே முக்கால்.

— தகவல்: ரெங்கம்.



சந்திரசூடன் நடுங்கும் கால்களுடன் உள்ளே அடியெடுத்து வைத்தார். அங்கு ஏதோ ஓர் விசித்திர உணர்வு வியாபித்து அவரைச் சூழ்ந்திருப்பதுபோல் உணர்ந்தார். மெல்ல சக்திசிவத்தைத் தொட்டார். ''சாமி,'' என்று மெல்ல அழைத்தார். பதில் ஏதும் இல்லை.

சக்திசிவத்தின் உடல் சில்லென்று குளிர்ந்திருந்தது. பதற்றமடைந்த சந்திரசூடன் அவருடைய மூக்கில் விரலை வைத்துப் பார்த்தார். மூச்சில்லை! மார்பைச் சோதித்தார். இருதயத் துடிப்பில்லை! பதறிப் போய்க் கர்ப்பகிருஹத்தைவிட்டுப்பாய்ந்துவெளியே ஓடி வந்தார்.

சற்று நேரத்திற்குள் கோயிலுக்குள் கூட்டம் கூடிவிட்டது. சக்திசிவத்தின் உடலை அம்மன் சிலையிலிருந்து மிகுந்த பிரயாசையுடன் இன்ஸ்பெக்டரும் மற்றவர்களும் பிரித்து எடுத்து வந்து முன் மண்டபத்தில் கிடத்தினர்.

மாரடைப்பினால் அவருடைய உயிர் பிரிந்துவிட்டதாக டாக்டர் வந்து சொன்னபோதும்கூட நம்ப முடியவில்லை. சற்று முன் புத்தாடையுடுத்தியவராய்க் கர்ப்ப கிருஹத்தினுள் சென்று கதவை அடைத்ததை எல்லாரும் கண்டிருக்கிறார்கள். அதற்குள் இப்படி ஒரு முடிவா?

உடலில் எந்த வடுவும் இல்லை. முகத்தில் புன்முறுவலுடன் அலாதியான சாந்தி. சந்திரசூடனின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது.

சக்திசிவம் அம்பாளுடன் ஐக்கியமானதைக் கண்ட ஒரே நபர் அவர்தாம். அதை எண்ணி மெய்சிலிர்த்துப் பக்திப் பரவசத்தில் கண்ணீர் பெருகியது.

அங்கு கூடியிருந்தவர்கள் பிரமிப்படைந்தனர். புன்முறுவலுடன் தரையில் கிடந்த சக்திசிவத்தைப் பார்த்துக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் டாக்டரிடம், ''மாரடைப்பிற்கு என்ன காரணமாயிருக்கலாம்?'' என்று கேட்டார்.

''அளவு மீறிய உணர்ச்சிகாரணமாயிருக்கலாம். பக்தி அளவு மீறிப் போய் உணர்ச்சிவசப்பட்டிருப்பார்'' என்றார் டாக்டர்.

அப்போது திடீரென்று கோயில் வாசலில் சலசலப்புத் தோன்றியது. கோயில் ஊழியன் பக்கிரிசாமி, தன் மனைவியைத் தலை மயிரைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தான். கூட்டம் விலகி வழிவிட்டது.

பக்கிரிசாமி அவளை இன்ஸ்பெக்டர் முன்னால் தள்ளினான். அவள் இன்ஸ்பெக்டரின் காலைப் பற்றிக் கொண்டு, ''சாமி தெரியாமல் செய்துவிட்டேன்'' என்று அலறினாள்.

இன்ஸ்பெக்டரின் முகத்தில் கடுமை பரவியது.

''இந்தச் சிறுக்கி துட்டுக்கு ஆசைப்பட்டுப் பெரிய பொய்யைச் சுமத்தியிருக்கிறாள்'' என்றான் பக்கிரிசாமி.

இன்ஸ்பெக்டர் அவளைப் பார்த்து முறைத்தார். அவள் பதறிப் போய் அழுதபடியே, ''எசமான், உண்மையைச் சொல்லிவிடுகிறேன். சினிமாக் கொட்டகை முதலாளிதான் இப்படிச் சொல்லச் சொல்லிப் பணம் கொடுத்தார். சினிமாக் கொட்டகை பாஸும் தந்தார். சாமி, துட்டுக்கும், சினிமாவுக்கும் ஆசைப்பட்டுப் பூசாரி சாமி மீது அவதூறாச் சொல்லிவிட்டேன்'' என்றாள்.

''யார் ராமசுப்பனா?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''ஆமாம் எசமான். அந்த முதலாளிதான் எசமான்'' என்று அழுதாள். ''என்னை ஜெயிலிலே போட்டுடாதீங்க எசமான். இனிமே இந்த மாதிரித் தப்பு செய்யமாட்டேன்'' என்று இன்ஸ்பெக்டரின் கால்களைப் பற்றிக் கொண்டாள்.

''எசமான், காலையிலே இவள் பெட்டிக்குள் நூறு ரூபாயை வைக்கும்போது பார்த்துவிட்டேன். பிடறியிலே இரண்டு அடி போட்டதுமே உண்மையைச் சொல்லிவிட்டாள். இந்தக் கோயிலிலே பரம்பரையாக நாங்க வேலை செய்கிற குடும்பம். பூசாரி சாமி, தெய்வம் மாதிரி. அவரைப் போய் இந்தச் சிறுக்கி....'' என்றபடியே அவளை எட்டி உதைத்தான் பக்கிரிசாமி.

அவளைப் போலீஸ் காருக்கு இழுத்துச் செல்லும்படி இன்ஸ்பெக்டர் உத்தரவிடவே, ஒரு போலீஸ்காரர் அவளை இழுத்துப் போய் காருக்குள் ஏற்றினார். அவள் அழுது அரற்றிக் கொண்டிருந்தாள்.

சற்று நேரத்தில் போலீஸ்காரர்கள் சென்றுவிட்டார்கள். கோயிலுக்குள் சக்திசிவத்தினருகில், சந்திரசூடனும், குமாரும் அமர்ந்திருந்தனர். செய்தி பரவி கூட்டம் கூடிக் கொண்டிருந்தது.

அன்று சக்திசிவத்தின் சமக்கிரியை முடிந்து, மயானத்திலிருந்து சந்திரசூடன் திரும்பியபோது, இரவு ஒன்பது மணியாகிவிட்டது.

என்றுமில்லாத ஓர் அபூர்வ மனச்சாந்தி அவருக்கு ஏற்பட்டிருந்தது.

(தொடரும்)

சுந்தரம் தயக்கத்தோடு எட்டிப் பார்த்தார். உள்ளே கிழவர் சுயம்பிரகாசம்— அப்படி அவரைச் சொல்ல இன்றைக்கு ஓர் ஆள் கூடக் கிடையாது. பெரியவர் என்றுதான் அவரைச் சொல்வார்கள்...

பூஜையறை பளிச்சென்று இருந்தது. குத்து விளக்குகளின் ஜொலிப்பும், ஊதுவத்தியின் மணமும், பூக்களின் பிரகாசமும் வீட்டிற்கே ஒரு சோபையைத் தர, பூஜையறையில் மணை போட்டு நடுநாயகமாக உட்கார்ந்திருந்தார்.

பெரியவர் சிவப்பழமாக ஜொலித்துக் கொண்டிருக்க, வீட்டிலிருக்கும் குஞ்சு குளுவான்கள் பணிவாக வெளியே கற்பூரத் தட்டைத் தொட்டு ஒற்றிக் கொள்ள.. தயாராகக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

சுந்தரமும் ஒரு காலத்தில், இதேபோல் நின்று கொண்டிருந்தவர்தான்...

---

**அரசுமணிமேகலை**



# இதுவும் ஒருவகை நியாயம்தான்...

இன்றுகாலம்அவரைஹாலுக்குவெளியே தள்ளி நிற்க வைத்து, அப்பனுக்கும் பிள்ளைக் கும் நடுவே ஒரு மாயத்திரையை இறக்கிவிட்டு விட்டது!

சுந்தரம் காலை மாற்றி வைத்துக் கொண் டார்—அச்சத்தோடு உள்ளே எட்டிப் பார்த்து விட்டு, தலையை வெளியே இழுத்துக் கொண் டார்!

''தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி''

பெரியவர் குரல் இந்த எண்பது வயதுக் கும் கணீர் என்று இருந்தது. காஞ்சிபுரம் நாயனுப்பிள்ளையிடம்கொஞ்சகாலம்சிஷை என்று கூடச் சொல்வார்கள்...



கொஞ்சம் பருமனான உடம்பு — நடை அசைப்பில் சிங்கம் நடந்து வருவதைப் போல் இருக்கும்... நெற்றியில் மூன்று கீற்று ஒளி வெள்ளமாய் விபூதிப் பட்டைகள்!

பெரியவர் பூஜையை முடிக்க எப்படியும் பத்துப் பதினைந்து நிமிடங்களுக்கு மேல் ஆகும்... அதற்குப் பிறகு கற்பூர ஆரத்தி — பெரியவர்களும், குழந்தைகளும் வரிசையாக வந்து நின்று, தொட்டு சேவித்துக் கொள்ள வேண்டும் — சுந்தரத்தின் மனைவி விசா லாட்சி பணிவாகக் காத்திருந்தாள்.

பெரியவர் சரியாக எட்டரை மணிக்குக் கடையைத் திறக்கக் கையில் கொத்துச் சாவி யோடு கிளம்பி விடுவார். அத்துடன் சரி... பகல் சாப்பாட்டிற்குக் கூட, வீட்டிற்கு வர மாட்டார்.

பெரியவர் வியாபாரத்தில் மிகமிகக் கண் டிப்பானவர். அவர் கடையில் வியாபாரம் எப்போதுமே விறுவிறுப்பாக நடக்கும் — பண்டிகைக் காலம் போலக் கூட்டம் நெருக்கி யடிக்கும்!

ஆனால் ஒன்று... ஒரு சின்ன குழந்தை வந்தாலும் ஒரே விலைதான்! ஒரு பைசா ஏற இறங்க இருக்காது. அந்த அளவுக்கு நேர்மை யான வியாபாரம்.

சுந்தரம் இன்னும் கூட வாசலிலேயே தான் தயங்கிக் கொண்டு நின்றிருந்தார். உள்ளே போய்ப் பூஜையில் கலந்து கொள்ள, கால்களுக்குத் துணிவில்லை.

அப்பாவின் கைகளைப் பிடித்துக் கொண்டு, காஞ்சிபுரம் கோயில்களை வலம் வந்த நாட்கள் கண்முன்னே படம் போல ஓடின...

காலம் ஏன் இப்படித் தந்தைக்கும், மகனுக்கும் இடையில் இவ்வளவு பெரிய பிளவை ஏற்படுத்தி விட்டு விட்டது?

சுந்தரம் வேதனையுடன் தலையைக் குனிந்து கொண்டார்!

பெரியவர் எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு வெளியே வந்தபோது, சுந்தரம் நிற்கக் கண்டு திடுக்கிட்டுப் பின் வாங்கினார்.

ஐம்பது வயது மகனான சுந்தரம் ஐந்து வயதுப் பையனைப் போல், தந்தையைப் பார்த்ததும் தயங்கித் தம் தலையைக் குனிந்து கொண்டார்.

பெரியவர் புருவத்தைச் சுருக்கி, விழிக ளாலேயே வினாத் தொடுத்தார்.

''அப்பா! உங்க கூடக் கொஞ்சம் பேச ணும்!''

வாழ்வில் வளம் சேர்க்கும்
வகை சொல்லும் ஜோதிடத்தைக் கற்றிடுங்கள்.

# ஜோதிடப் பயிற்சி

தபால் வழி போதனா முறை

எவரெவர் எத்தர வாழ்வடைவார்? என்ன என்ன சாதிப்பார்? இனிய வாழ்வு கொள்வாரா? இல்லையேல் இன்னலுற்று தவிப்பாரா? ஏற்ற தொழிலில் இடரின்றி லாபமதைப் பெறுவாரா? இனிய மணவாழ்வு பெறுவாரா? இடையே பிரிவடைந்து துக்கமதைச் சுமப்பாரா? வீடு கட்டி, வேந்தனைப் போல் வாழ்வாரா? பட்டப் படிப்படைந்து பாரினில் பதவி பெற்றுயர்வாரா? என்றெல்லாம் எள்ளளவும் பிழையின்றிச் சொல்லுங்கலை ஜோதிடத்தை சோடையின்றிக் கற்றிட ஏற்றதான வாய்ப்பிது. இனிய தமிழ் மொழியினிலே கனிவான பாடங்கள் — பாடத்துடன் தருகின்ற நாட்குறிப்பும், சிறப்புக் கட்டுரையும், கேள்வி பதில்ப் பகுதியும் இக்கலை கற்றுத் தேறத் துணை நிற்கும் துன்பம் நீக்கும். இக்கலை கற்றிடப் புகுந்தாலே கிரக தோஷங்கள் விலகிவிடும் — கீர்த்தி நிலை வந்தடையும். அத்துடன் மாதந்தோறும் சக்தி மிக்க 'பௌர்ணமி பூஜாப் பிரசாத விபூதி' அனுப்பி வைப்போம். உற்ற கஷ்டங்கள் விலகி — உயர்வினை சேர்த்து வைக்கும். இப்போது மாணவர்கள் 'வி' பிரிவில் சேர்த்துக் கொள்ளப் படுகின்றனர். கற்று முடித்தார்க்கு 'சான்றிதழும்' 'ஜோதிடக் கலைஞர்' என்ற பட்டமும் தருகின்றோம். தொழிலாகக் கொள்வார்க்கு துணை நிற்கும் இவ்விரண்டும்.



சேரும் முறை அறிய, செலுத்தும் கட்டணம் தனை அறிய — உங்கள் தெளிவான விலாசத்துடன் 31.1.1986 தேதிக்குள் மனுச் செய்து கொள்ளுங்கள்.

பிரபல ஜோதிடர் ஜோதிட ஆசிரியர்

**ஸ்ரீ மத் விஜயவீரதேவா**


43412

யோகி ராஜயோக பயிற்சியாளர்

பிளாட் நெ. 204, தெரு வண்-5, அண்ணா நகர், மதுரை-625 020.



''மாப்பிள்ளை டாக்டரா இருக்கலாம். அதுக்காகக் கல்யாணத்துக்கு இப்படியா டெட்டால் தெளிச்சு வரவேற்கிறது?''

— இளை அ. கதிர்வேல்.

முதல் 'அப்பா'வை விட, கடைசியாக வந்த 'அப்பா'வில் இளக்கம் அதிகம் இருந்தது.

என்னவாக இருக்கும் போல, சுந்தரத்தையே கூர்ந்து நோக்கினார் பெரியவர்.

அவருக்குப் புரியவில்லை. எதுவும் பேசாமல் மாடியை நோக்கி நடந்தார். சுந்தரம் எதுவும் பேசாமல் பின் தொடர்ந்தார்.

மாளிகை போன்ற வீடு... தொழுவத்தில் இருந்த ஒரு தாய்ப்பசு 'ஹ...ம்மா' என்று கம்பீரமாகக் குரல் கொடுத்தது.

பெரியவர் தம் அறைக்குள் நுழைந்து, சாய்வு நாற்காலியில் மெல்ல உட்கார்ந்தார்.

அருகில் இருந்த நாற்காலியைத் தட்டி, 'உட்கார்' என்று ஜாடை காட்டினார்.

''இல்லேப்பா... நான் இங்கேயே உக்காந்துக்கிறேன்'' என்று பணிவாகச் சொல்லி விட்டு, எப்போதும் போலவே சாய்வு நாற்காலியின் அருகில், தரையில் உட்கார்ந்து கொண்டார், சுந்தரம்.

பெரியவர் தீர்க்கமாக அவரையே பார்த்தார். ஆனால், ஏதும் பேச முற்படவில்லை.

மனத்துக்குள் புதைந்திருந்த சோகத்தின் கனம் பெருமூச்சாக வெளிவந்தது.

சுந்தரம் சிலையைப் போல உட்கார்ந்திருந்தார். சுமார் பத்தாண்டுகளுக்கு முன்பு இதேபோல், இதே இடத்தில், இப்படித்தான் உட்கார்ந்திருந்தார்.

இன்றும் அதே இடம்தான்! ஆனால் காரணங்கள்தாம் மாறியிருந்தன.

''என்னப்பா சுந்தரம்? என்ன விஷயம்?''

பெரியவர் மெல்லக் கேட்டார்.

சுந்தரம் திடுக்கிட்டு, தலையைத் தூக்கிப் பார்த்தவர், தந்தையையே ஆனந்தப் பரவசத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்.

பத்து ஆண்டுகளாக, நாள், கிழமை, பொங்கல், தீபாவளி என்றால் மட்டுமே ஒன்றிரண்டு வார்த்தைகள் — அதுவும் ஊர் வாயில் விழுந்து எழுந்திருக்கக் கூடாது என்பதற்காகவே — ஒன்றிரண்டு வார்த்தைகள் பேசுவார்.

''மற்றபடி தந்தைக்கும், மகனுக்கும் இந்தப் பத்தாண்டுகளில் ஒரு பெரும் பனிப் போரே நடந்து வந்தது சிலருக்கு மட்டுமே தெரிந்த உண்மை.

சுந்தரம் தந்தையின் பராமுகத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டார் என்றாலும், பாதிக்கப்படாதவர் போல, வெளியிலே நடந்து கொண்டார்.

ஆனால், உள்ளூர மனம் தந்தையின் அண்மையை, அரவணைப்பை, ஆதரவை நாடியது. பெரியவர் சட்டை செய்யவே இல்லை.

'காலுக்கு உதவாததைக் கழற்றியெறி...' என்பதைப் போல் நடந்துகொண்டார். எவ்வளவோ அறிவுரை கூறியும், மகன் கேட்காமல் நடந்து கொண்டது அவருக்குப் பெருத்த அடியாக இருந்திருக்க வேண்டும். பேச்சைச் சுத்தமாகவே நிறுத்திக் கொண்டார்.

மகனின் கலங்கிய முகமும், பரிதாபமான தோற்றமும், பழையபடியே பணிவுடன் காலடியில் அமர்ந்து கொண்டதும் அவரின் இதயத்தில் ஓர் ஈரச் சிலிர்ப்பை ஏற்படுத்தி விட்டதால், அவராகவே பேசினார்.

''என்னப்பா சுந்தரம்? என்ன விஷயம்?''

''வந்துப்பா... வந்து... அதை நான் எப்படிச் சொல்றதுன்னுதான்! அப்பா... நான்... ரஞ்சிதம் வீட்டுப் பக்கம் போறதையே நிறுத்திக்கிட்டேன்.''

''எவ்வளவு நாளா?''

''ஒரு ரெண்டு மாசமா?''

''என்ன காரணம்?''

''வந்துப்பா... நம்ப கல்யாணியை அவங்க பிள்ளைக்குக் கேட்டு வந்தாங்க இல்லே அந்த மதுரைக்காரங்க...?''

''ஆமாம்! வந்தாங்க! அதுக்கு என்ன?''

''இல்லேப்பா! ரஞ்சிதம் விஷயம் அவங்களுக்கு அரசல் புரசலாத் தெரிஞ்சிருக்கும் போல் இருக்குது. அதுக்காகத்தான் தயங்கறாங்களாம்! நடராஜன் சித்தப்பா சொன்னார்.''

''அதனாலே...''

கிழவரின் கேள்வியிலே அதிகாரம் இல்லே; உருட்டல் மிரட்டல் இல்லே.

''அதனாலே, இந்த விவகாரத்துக்கு ஒரு முற்றுப்புள்ளி வெச்சிடலாம்னு முடிவு கட்டிட்டேன்! கல்யாணிக்கு நல்ல ஒரு பெரிய இடத்துச் சம்பந்தம் வர்ற நேரத்துலே, இந்தக் காரணத்தாலே அது நின்னதா இருக்கக் கூடாது... அதோட உங்க மனசுக்கும் ஒரு நிம்மதி உண்டாகும்... பழையபடி... பழையபடி... நீங்களும் என்கிட்டே பாசமா நடந்துப்பீங்க இல்லியா?''

''அப்படின்னா, அந்த ரஞ்சிதத்தைத் தொலைச்சித் தலை முழுகிடறதுன்னு முடிவுக்கே வந்துட்டியா?''

''ஆமாம்ப்பா!'' என்று சங்கடத்துடன் நெளிந்தார் சுந்தரம்.

''அது சரி! அதை ரஞ்சிதம்கிட்டே சொன்னியா?''

# ல் தான் சங்கரை ஆலோசனை கேட்டேன்.''



திரு. பி. கே. சர்மா, பெங்களூரில் கனரா வங்கியில் அலுவலர். அவர் தம் நண்பரும், பெங்களூரிலுள்ள கனரா வங்கி தலைமை அலுவலகத்தில் ஒரு மேலாளருமான திரு. பி. எஸ். சங்கர நாராயண் சிபாரிசு செய்த கலர் டிவியை வாங்கினார். அவர் கூறுகிறார்: ''சங்கர் எனக்கு நண்பர் மட்டுமே இல்லே, வழிகாட்டி கூட.. நான் செய்ற எந்தக் காரியத்தையும் அவரைக் கேக்காமே செய்றதில்லே. அதுலேயும் நான் ஒருகலர் டிவி வாங்க நெனைச்சப்போ, சட்டுனு என்னாலே எந்த முடிவுக்கும் வரமுடியல்லே. ஏன்னு, கடைகள்லே எத்தனையோ புதுப்புது கலர் டிவி வந்துண்டே இருக்கு. அதுலே பல வெளிநாட்டு பிராண்டுகள் கூட இருக்கு. சிலர் மேற்கு ஜெர்மனின்னாங்க, பலர் ஜப்பான்னாங்க. அதனாலே எனக்கு குழப்பம்தான் அதிகமாச்சு. அவசரப்பட்டு வாங்கிட்டு அப்பறம் அவதிப்படக் கூடாதே. அதனாலே, வழக்கம்போலே சங்கரை ஆலோசனை கேட்டேன்.

சங்கர் விவரமா வெளக்கிச் சொன்னாரு. அவர் எப்படி தன் கலர் டிவி வாங்கினாரு, அது இன்னும் எப்படி தொல்லைதராமே செறப்பா வேலை செய்துன்னு எடுத்துச் சொன்னாரு. அந்த கலர் டிவி செய்ற அபார வேலைக்கு அவர் கொடுத்த விலையைக் கேட்டபோது, என்னாலே நம்பவே முடியல்லே......

சில பெரிய கம்பெனிங்க டிவி விக்கறாங்க. அதைப்பத்தி ரொம்ப ஜம்பமா வெளம்பரம் பண்றாங்க. ஆனா அவங்க அதை தயாரிக்கறது கூட இல்லே; அதையெல்லாம் பார்த்து தவறான முடிவு எடுக்காதீங்க'' அப்படின்னாரு. இவ்வளவு தெரிஞ்சதுக்கப்பறமும் நான் எதையும் பார்க்கத் தயாராயில்லே. உடனே சங்கரைக் கையோட கூட்டிண்டு போயி அன்னிக்கி சாயங்காலமே சாலிடெர் கலர் டிவி வாங்கிட்டேன்.

இது உண்மையான கதை. சாலிடெரின் சிறந்த தரத்திற்கு இதுவே சான்று. சாலிடெர் மட்டுமே மக்களிடையே இத்தகைய நன்மதிப்பைப் பெற்றுள்ளது. காரணம், அது அளிக்கும் தெளிவான படம், தத்ரூபமான வண்ண ஒளிபரப்பு மற்றும் தரமுயர்ந்த தொழில் நுட்பம். எனவே இன்று மேன்மேலும் அதிக மக்கள் இதை வாங்குகின்றனர். முதன் முதலில் வாங்குவோரும், மற்ற முன்னணி பிளாக் & ஒயிட் டிவி வைத்திருப்போரும் இதையே நாடுகின்றனர். இந்த சிறப்புகள்தான் சாலிடெர் கலர் டிவியின்' உண்மையான பின் பலம். சாலிடெரையே நீங்கள் தேர்ந்தெடுப்பதற்கும் சான்று.

இதன் மற்ற சிறப்பம்சங்கள்—சாலிடெர், மேற்கு ஜெர்மனி தொழில் நுட்பத்தால் உருவானது. மேற்கு ஜெர்மனியின் ITT-யிலிருந்து வரும் பிழையற்ற உறுப்புகள் கொண்டது. அதோடு, நம் நாட்டின் கடுமையான பருவநிலைகளிலும் சிறப்பாக வேலை செய்ய உருவாக்கப்பட்டது.

தவிர, சாலிடெரில் VCR, வீடியோ விளையாட்டுகள் மற்றும் ஹோம் கம்ப்யூட்டர் கனெக்ஷன் முதலான வசதிகளும் உள்ளன. இவற்றுக்கெல்லாம் சிகரமாக, சாலிடெரின் விற்பனைக்குப் பிந்தைய சேவை எல்லாப் பகுதிகளிலும் உண்டு.

Insight-DE-317




**கலர்**
# சாலிடெர்
-தொல்லையில்லாத் தொலைக்காட்சி

''சொல்லலேப்பா! ஆனா... அவ என்னைத் தேடிக்கிட்டு, கடைக்கெல்லாம்வர மாட்டா... இதுதான் விஷயம்னு சொல்லிட்டா, இந்தப் பக்கம் கூட வர மாட்டா... ஊர்ல என்ன பேசுவாங்களோன்னுதானே கவலேப்பட றீங்க...?''

''ம்! ஊரைப் பத்தி நான் கவலேப்படலே. என் புள்ளையைப் பத்தித்தான் நான் கவலேப் படறதெல்லாம்.''

''என்னப்பா சொல்றீங்க...?''

''ஆமாம்ப்பா சுந்தரம்... பத்து வருஷங் களுக்கு முன்னாடி, இதே இடத்துலே நீ நின்னுக்கிட்டிருந்தே! அப்ப என் பையனுக்கு இருந்த நேர்மை இப்போ இல்லாமே போயி டிச்சேன்னுதான் வருத்தப்படறேன்.''

''என்ன அப்பா நீங்க?''

''ஆமாம் சுந்தரம்! பத்து வருஷத்துக்கு முன்னாலே இந்தப் பேச்சு வந்தது. 'எப்ப டியோ நாங்க பழகிட்டோம். உத்தமமான பொண்ணு... அவளே நான் கைவிடறதா இல்லே'ன்னு சொன்னே! 'குடும்பத்துலே ஒரு பய இப்படிப் பண்ணதில்லே! வேண் டாம்டா! வேண்டாம்டா'ன்னு எவ்வளவோ சொன்னேன். நீ கேட்டுக்கவே இல்லே. ஒரு தப்புத்தான் செய்தே நீ. ஆனாலும் அவளேக் கைவிட மாட்டேன்னு சொன்னப்போ ஒரு நேர்மை தெரிஞ்சது... ஆனா இப்போ!''

''என் முடிவு உங்களேச் சந்தோஷப்படுத் தும்னு நினேச்சேம்ப்பா!''

''ஓர் உண்மையான இந்து, உறவுகள் துண்டிக்கப் படறப்போ சந்தோஷப்பட மாட்டான் சுந்தரம்! உன்னேயே நம்பி உன் மனேவியா வாழ்ந்துக்கிட்டிருக்கிற அந்த ரஞ்சிதம்.... அப்பா அம்மா யாருமே இல் லாதவன்னு நீயே அன்னிக்கு வாதாடினே... அப்படி இருக்கிறப்போ நீ அவளோட தொடர் பைத் துண்டிச்சுக்கிட்டா அவ நிலேமை என் னப்பா ஆகும்? 'அன்பே சிவம்'னு சொல்ற இந்து இப்படியா ஒரு கோழையைப் போல ஓடுவான்? இந்த உறவு உலகத்தோட பார்வை யிலே பெரிய தப்பா இருக்கலாம்... ஆனா மனசுன்னு ஒண்ணு இருக்கேப்பா! அந்த மனசாலே துரோகம் நினேச்சுக்கிட்டு, நம்ம கல்யாணிக்கு ஒரு நல்லது பண்ண நினேச்சா அது நல்லா இருக்குமா?''

ஒரு கணம் நிறுத்தினர் பெரியவர்.

''கல்யாணிக்கு வேற நல்ல இடம் வரும்... நீ தப்புகளோட எண்ணிக்கையை அதிக மாக்கிக்கிட்டே போகாதேப்பா...''

''நான்... நீங்க... அப்போ பேசாமே...''

ஏதோ சுந்தரம் உள்ளுக்குள்ளேயே முனகிக் கொண்டார்.

''இதோ பாருப்பா... உனக்கு அம்பது வயசு ஆயிட்டுது இல்லேயா? உன் கூட நான் பேசாதது எவ்வளவோ பெரிய தண்டனேயா இருந்திருக்கும் இல்லேயா? ஒண்ணுக்கு ரெண்டு சம்சாரம்.... குழந்தைங்க... கடை, கண்ணி, ஆளுங்க — எல்லாரும் இருந்தும் என்னோட பேச நீ ஆசைப்பட்டே இல் லேயா?''

''ஆமாம்ப்பா...''

''ரஞ்சிதம் நிலேமை என்ன சுந்தரம்? அவ ளுக்கு யார் இருக்காங்க? பத்து வருஷங்கள் பழகிட்டு, விட்டுட்டு ஓடிவந்துட்டா, அதே மாதிரி ஏக்கம், கஷ்டம் அவளுக்கு இருக் காதா? வயசான காலத்துலேதான் அன்பும், ஆதரவும், பிரியமும் தேவை.''

''அப்படின்னு...?''

''ஆமாம், சுந்தரம்! தப்புப் பண்ணிட்டு ஓடி வந்துடறவன் மனுஷனே இல்லே... வியா பாரமோ, வாழ்க்கையோ எதுவா இருந்தா லும் ஒரு நேர்மை வேணும்...''

சுந்தரம் தந்தை மடியில் முகம் சாய்த்துக் கேவிக் கேவி அழுது கொண்டிருந்தார்.

பெரியவரின் கரம் ஆதரவாக, அதே நேரம் உறுதியாக மகனின் தலேயை வருடிக் கொடுக்கத் தொடங்கியது...

# முதல் முறையாக மகாத்மாவுடன் மாறுபாடு!



ஒரு புதிய ஒலி—சிலருக்கு மெய்சிலிர்ப்பாகவும், மற்றவர்களுக்கு பயங்கரமாகவும் தோன்றிய ஒலி — எழும்பியது: "பாகிஸ்தான்!" ஜனவரி 1940-இல் ஜின்னா கூறினார்: "ஹிந்துக்களும் முஸ்லிம்களும் இரு தனி வகுப்பினர் மட்டும் அல்ல, அவர்கள் இரு வேறு தேசத்தவர்கள்!"

அதிர்ச்சியாலும் வருத்தத்தாலும் தாக்குண்ட ஸி. ஆர். இந்த கோஷத்தை "நோயுற்ற மனநிலைக்கு அறிகுறி" என்று வர்ணித்தார். மார்ச் மாதம் நிறைவேறிய முஸ்லிம் லீகின் லாகூர் தீர்மானத்துக்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு, "ஜின்னா இந்தியாவை பால்கன் ராஜ்யங்களின் நிலைக்கு இழுத்துச் செல்கிறார்" என்று குற்றம் சாட்டினார் ஸி. ஆர். "பால்கன் தீபகர்ப்பம் எந்த நிலையில் இருக்கிறதென்பது ஜின்னாவுக்குத் தெரியாதா? அதனைத் தாக்க ரஷ்யாவும் ஜெர்மனியும் தக்க தருணத்தை எதிர்பார்த்துக்காத்திருப்பதைஅவர் அறியாரா? இந்தியாவிலிருந்து தனியே வெட்டி எடுக்கப்பட்ட ஒரு தனி முஸ்லிம் தேசம் என்பது அபத்தமானது, நடைமுறைக்கு ஒவ்வாதது! சிறுபான்மையினர் பிரச்னைக்குத் தீர்வு காணும் வழி இது அல்ல. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் பிதுரார்ஜித சொத்தைப் பங்கு போட்டுக் கொள்ளப் போகிறார்களா? வீட்டையும் கறவை மாட்டையும் பங்கு போடுவதா? ஒரே குழந்தைக்கு உரிமை கொண்டாடிய இரு பெண்களுள் ஒருத்தி குழந்தையை வெட்டிப் பகிர்ந்து கொள்ளத் தயாராயிருந்தபோது, மற்றொருத்தி பதறிப் போய், விட்டுக் கொடுத்து, தானே மெய்யான தாய் என்று நிரூபித்த கதை என் நினைவுக்கு வருகிறது!" என்றெல்லாம் ஸி. ஆர். கூறினார்: "பாகிஸ்தான் என்பது நோயுற்ற மனத்தின் அநாகரிகக் கருத்து என்பதோடு நவீன இந்தியாவினால் நிச்சயமாக ஒப்புக் கொள்ள முடியாத கருத்துமாகும்.

ஏதோ சொல்லிவிட்டாரே தவிர ஜின்னாவின் மெய்யான கருத்து இதுவாக இராது என்று தாம் நம்புவதாக ஆவலோடு தெரிவித்தார் ஸி. ஆர். "முஸ்லிம் மாகாணங்களுக்கு முழுமையான அதிகாரத்துக்காகப் போராடலாம்; ஹிந்துக்கள் பெரும்பான்மையாய் உள்ள மத்திய அரசினால் அம்மாகாணங்கள் அடிமைப்படுத்தப்பட மாட்டா என்ற உத்திரவாதம் பெறலாம். இவற்றைத்தான் ஜின்னா விரும்புகிறார் என்று எண்ணுகிறேன். அவ்வாறுயின் அது பாராட்டுக்குரிய விருப்பம்தான். இதற்காக இந்தியாவைத் துண்டாட வேண்டும் என்ற அவசியம் இல்லையே! ஆனால் நான் ஆசையோடு எதிர்பார்ப்பது போலன்றி மெய்யாலுமே, இந்தியக் காரின் சக்கரத்தைக் குத்தித் துளைத்து அதன் முன்னேற்றத்தைத் தடை செய்வதிலேயே லீக் தீவிரமாக இருக்குமேயானால்; காங்கிரஸ், பிரிட்டிஷ் அரசை மட்டுமின்றி லீகையும் எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும்!"

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னரே ஜின்னாவிடம் மாறுதல் ஏற்பட்டிருந்ததை கவனித்திருந்தார் மகாத்மா. ஃபிப்ரவரி 1938 இல் அவர் ஜின்னாவுக்கு எழுதிய கடிதத்தில் கேட்டார்: "நீங்கள் இப்போதெல்லாம் மேடையில் பேசும் பொழுது அந்தப் பழைய தேசியவாதியை நான் காண்பதில்லையே? நீங்கள் இன்னும் மாறாமல்தான் இருக்கிறீர்களா?" ஜின்னா இதைப் பற்றி விவாதிக்க மறுத்துவிட்டார்.

ஜின்னாவின் தாத்தா ஹிந்து மதத்திலிருந்து

முஸ்லிம் மதத்துக்கு மாறிய ஒருவர்தான். எனினும் ஜின்னா இப்படி முஸ்லிம்களாக மதம் மாறியவர்களும் இந்தியர்களே என்ற காந்திஜியின் வாதத்தை ஒப்புக் கொள்ளவில்லை. ஹிந்துக்களும் முஸ்லிம்களும் ஒரு பந்தியில் உண்பதில்லை என்றும், தங்களுக்குள் கலப்புத் திருமணம் செய்து கொள்வதில்லை என்றும் அழுத்தமாகச் சொன்னார். முஸ்லிம்களின் பழக்கவழக்கங்கள் இலக்கியங்கள், இதிகாசங்கள், அவற்றின் கதாநாயகர்கள் எல்லாமே முற்றிலும் வித்தியாசமானவை என்று எடுத்துக் காட்டினார்.

''லாகூர் தீர்மானத்தைப் பற்றி, 'இந்தியாவைத் துண்டாடுதல்' என்றோ குழந்தையை இரண்டாக வெட்டுவது' என்றோ காந்தியும் ராஜகோபாலாச்சாரியும் பேசுவது தமக்கு மிகுந்த ஆச்சரியம் அளிக்கிறது' என்றார் ஜின்னா. 'ஒரே தேசம் என்ற நிலை இங்கு அமுலில் இருந்தால் அல்லவா அது பிளவுபடுதல் என்ற பிரச்னை எழும்? எங்கே இருக்கிறது அந்த ஒரே தேசம்?''

ஒத்துழையாமை இயக்கம் தொடங்கினால் அது எந்த உருவில் அமையும்? இருபதுகளின் ஆரம்பத்திலும் முப்பதுகளின் தொடக்கத்திலும் எழுந்த இக்கேள்வி மீண்டும் காங்கிரஸின் முன் எழுந்தது. முன்னர் சில தருணங்களில் செய்தது போலவே ஸி. ஆர். மீண்டும் மக்களை 'சத்தியாக்கிரஹக் காவலரின்' அறைகூவலுக்காகக் காத்திருக்குமாறு கேட்டுக் கொண்டார். காந்தி யோசித்துக் கொண்டிருந்தபோதே ஹிட்லர் தம் தீவிரத் தாக்குதல்களைத் தொடர்ந்தார். நார்வேயும் டென்மார்க்கும், ஹாலந்தும், பெல்ஜியமும், ஃப்ரான்ஸும் கூட நாஜி டாங்குகளுக்கு எதிரே வீழ்ந்தன. சேம்பர்லினின் இடத்தில் பிரதம மந்திரி பதவி ஏற்ற சர்ச்சிலுக்குப் பல பிரச்னைகள் காத்திருந்தன. பிரிட்டனை ஜெர்மானியப் படைகளின் ஆக்கிரமிப்பிலிருந்து பிரித்து வைத்திருந்தது குறுகலான இங்கிலீஷ் கால்வாய் மட்டுமே! ஹிட்லரின் சர்வாதிகாரத்துக்கு எதிராகவும் நேச நாடுகளின் முயற்சிக்கு ஆதரவாகவும் ஏற்கெனவே பல முறை குரல் எழுப்பியிருந்த காங்கிரஸ், பிரிட்டனை நேரடியாகப் போர் அச்சுறுத்திக் கொண்டிருந்த நேரத்தில் அதனை தர்ம சங்கடத்தில் ஆழ்த்துவது தர்மமாகுமா? சுபாஷ் போஸுக்கு இந்தக் கவலை இருக்கவில்லை.' அவருக்கு இந்தியாவின் சுதந்திரம் மட்டுமே குறி. ஜூலை தொடக்கத்தில் பிரிட்டிஷ் அரசு அவரைக் கைது செய்தது. இளைஞர் ஜயபிரகாஷ் நாராயணும் கைதானார்.

ஆனால் ஸி. ஆர்., போஸ் போன்றோரிடமிருந்து மாறுபட்டார். ''அனைத்துலகப் பிரச்னைகளை மறந்து நம் சொந்தப் பிரச்னைகளை மட்டும் எண்ணுவது முடியாத காரியம்'' என்று திருநெல்வேலியில் பேசினார். ''ஆனாலும் ஒவ்வொரு நாடும் தன் சொந்த வாழ்க்கை நலனையும் கவனிக்கத்தானே வேண்டும்! நாட்டின் உரிமைகளை மறந்துவிட்டு உலகளாவிய முறையில் மனித குலத்துக்குத் தொண்டாற்ற முடியாது. அடிமைகளாக இருக்க ஒப்புக் கொள்வதன் மூலம் நேசநாடுகளுக்கு உதவியவர்களாக மாட்டோம்.''

பிரிட்டிஷ் அரசை தர்ம சங்கடத்தில் ஆழ்த்தாமல் அதனை எதிர்ப்பது என்பது நடக்காத காரியம். ஆனால் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ள முடியாதா? ''ஃப்ரான்ஸை இழந்துள்ள இத்தருணத்தில் சுதந்திர இந்தியாவை நேசநாடுகளில் ஒன்றாகச் சேர்த்துக் கொள்வது பிரிட்டனுக்கு லாபகரமாக இருக்குமல்லவா?'' என்று கேட்டார் ஸி. ஆர். சுதந்திரம் பெற்ற இந்தியாவின் படை வீரர்களும், சாதனங்களும், பரந்து விரிந்த நிலப்பரப்பும் ஏற்கெனவே பிரிட்டனின் உபயோகத்துக்குத் தயாராகத்தான் இருந்தன; ஆனால் அவற்றைவிடச் சுதந்திர இந்தியாவின் உற்சாகமான ஆதரவு என்பது சிறந்ததல்லவா! யுத்த முயற்சியில் காங்கிரஸ் ஒத்துழைத்தால், முன்பு எப்போதையும் விட அதிகமான அளவில் ஆதரவு தேடும் நிலையில் இருந்த பிரிட்டன் பதிலுக்கு இந்தியாவை ஆளும் பொறுப்பில் ஒரு கணிசமான பங்கை அதற்கு விட்டுக் கொடுக்குமா?

பிரிட்டன் அப்படி நடந்து கொள்ளும் என்று எண்ணியே, இருபது ஆண்டுகளுக்குப் பிறகு முதல் முறையாக மகாத்மாவின் சொல்லை மீறுமாறு காங்கிரஸை வற்புறுத்தினார் ஸி. ஆர். யுத்தத்தின் முடிவில் இந்தியா சுதந்திரம் பெறும் என்று உறுதி கூறி, உடனடியாக ஓர் அனைத்துக் கட்சி தேசிய அரசை மத்தியில் நிறுவினால் நேச நாடுகளுள் ஒன்றாக இந்தியா இணைந்து யுத்தத்தில் பங்கேற்கும் என்ற ஸி. ஆரின் தீர்மானத்தை ஒப்புக் கொண்டது காங்கிரஸ். இது காந்திய அஹிம்சைக் கொள்கையினைப் புறக்கணித்ததாயிற்று. யுத்தம் ஆரம்பிக்கிற சமயத்தில், காங்கிரஸ் பிரிட்டனுக்கு நிபந்தனையற்ற ஆதரவு அளிக்க வேண்டும் என்று கூறிய மகாத்மா, தார்மீக ஆதரவைத்தான் குறிப்பிட்டார். யுத்தத்தில் நேரடியாகப் பங்கேற்கத் தயார் என்ற ஸி. ஆரின் கருத்து இந்திய சுதந்திரத்தை உறுதிப்படுத்தும் சில நிபந்தனைகளை உள்ளடக்கியிருந்தது என்றாலும் கூட மகாத்மாவால் ஸி. ஆரின் அந்தத் தயார் நிலையை ஆமோதிக்க முடியவில்லை.

(தொடரும்)

தமிழாக்கம்: **சீதாரவி.**



* என். ஷண்முகம், உன்னி.

? உண்மையைச் சொன்னால் உதைக்க வருகிறார்களே?

! பொய்களைச் சொல்லிப் பிழைப்பு நடத்திக் கொண்டிருப்பதைவிட, உண்மையைச் சொல்லி உதை வாங்குவதே பெருமை.

* எஸ். ஏ. கோவிந்தகுமார், நீடாமங்கலம்.

? சுமன் மீண்டும் நடிக்கிறாராமே?

! அவர் நடிப்பதில் ஒரு பிரச்னையும் இல்லை. படமெடுத்தால்தான் பிரச்னையே!

* பி. சத்தியநாராயணமூர்த்தி, சென்னை—93

? வேலை இல்லாமல் திண்டாடும்போது உதவி செய்யாத அரசாங்கம், சம்பாதிக்கத் தொடங்கியவுடன் வருமான வரி வசூலிக்கிறதே! அது என்ன நியாயம்?

! வேலை கொடுத்து வருமான வரி வசூலிப்பது நியாயம்தான். ஆனால் வேலை வாய்ப்பில்லாத ஒர் அவலமான சூழ்நிலையை இன்னமும் அரசாங்கம் நீடிக்க விடுவதுதான் மிகப் பெரிய அநியாயம்!

# சுமன் மீண்டும் நடிக்கிறாராமே?

நீங்கள் கேட்டவை — தராசு



* பாதுகாப்பு வேண்டாம்!



* மறக்கப்...



* ......படாத...



* ......நபர்கள்....



* மீண்டும் நடிக்கிறார்!

* ஸுபாஷிணி ச்வேதாம்பரன், புது தில்லி—66.

? 'தாலியைக் கண்ணில் ஒற்றிக் கொள்கிற அளவுக்கு அது ஒன்றும் புனிதமானதல்ல' என்று தினமலர் — வார மலருக்கு ஜோதிர்லதா கிரிஜா பேட்டியளித்திருக்கிறாரே?

! தாலியைப் புனிதமாகக் கருதுகிறவர்களைக் குறைத்து மதிப்பிட வேண்டியதில்லை. அவர்கள் உணர்வுகளை மதிக்க வேண்டும். தாலி அணிவதும் அணியாததும் அவரவரின் விருப்புவெறுப்புகளையும் மனப் பக்குவத்தையும் பொறுத்தது. தாலியே கட்டிக் கொள்ளாத அல்லது தாலியைக் கழற்றி வைத்துவிட்டு அற்புதமாகக் குடித்தனம் செய்து கொண்டிருக்கும் பெண்களும் உண்டு.

* ஸ்ரீ பட்டாபிஷேகப்ரியன், குடியாத்தம்.

? அஸ்ஸாம் தேர்தல் முடிவு பற்றித் தங்கள் கருத்து?

! ஆறாண்டு காலமாகத் தங்கள் மாநில மக்களின் நியாயமான உணர்வுகளுக்காகப் போராடி வந்த மாணவர்களுடைய நேர்மைக்குக் கிடைத்திருக்கும் மிகப் பெரிய வெற்றி அது. அனைவருமே முப்பத்திரண்டு வயதுக்

குட்பட்ட இளைஞர்கள். நான்கே நான்கு பேரைத்தவிர மற்ற அறுபது பேரும்பட்டதாரிகள். கேட்கவே சந்தோஷமாக இருக்கிறது. உண்மையிலேயே இளைஞர்களுக்குக் கிடைத்திருக்கும்சரித்திரம்படைத்தஅந்தவெற்றியை நினைக்கும்போதெல்லாம் மனம் குதூகலிக்கிறது. ஆனால், இந்த சந்தோஷமும் குதூகலமும் நீடிக்குமா? அவர்களுடைய செயல்பாட்டைப் பார்த்துத்தான் சொல்ல முடியும்.

* **வி. இளங்கோவன், சென்னை — 19.** *

? **மாணவர்கள், பொது மக்கள் ஆகியோரின் நேரம் வீணாவதைத் தடுப்பதற்காகக் கர்நாடக அரசு சினிமாக் காட்சிகளில் ஒன்றைக் குறைக்க உத்தேசித்திருப்பதும் தமிழக அரசு ஒரு காட்சியை அதிகப்படுத்தப் போவதாகச் சொல்லிக் கொண்டிருப்பதும் குறித்து?**

! கர்நாடகத்தில் இருப்பது மக்களின் எதிர்காலம் பற்றிய தொலைநோக்குப் பார்வை கொண்டிருக்கும் அரசு. அதனால்தான் சினிமாக் காட்சிகளின் நேரத்தைக் குறைத்து மக்களின் உழைப்பு நேரத்தை அதிகப்படுத்தி முன்னேற எண்ணுகிறது. நமது அரசோ மக்களிடம் உள்ள சினிமா மாயையைப் பயன்படுத்திக் கொண்டே வெற்றி பெற்று வரும் அரசு. அதனால்தான் சினிமா நேரத்தை அதிகப்படுத்தி அந்த மாயையை இன்னும் பலப்படுத்த நினைக்கிறது.

* **நாகை. பொன்னி, நாகப்பட்டினம் — 1.**

? **பாதுகாப்பையே விரும்பாத நேருவுக்கும், பாதுகாப்புகளுடன் உலவும் ராஜீவ் காந்திக்கும் உள்ள வித்தியாசம் என்ன?**

! அன்றைய சூழ்நிலைக்கும், வன்முறை யென்பது பல இயக்கங்களாக ஆங்காங்கே வளர்ந்திருக்கிற இன்றைய சூழ்நிலைக்கும் இடையில் உள்ள வித்தியாசம்தான்!

* **ப. விஜயபாலன், பம்பாய் — 23.**

? **இந்த வல்லரசுகளிடம் ஆயுத பலம் இருப்பினும், யுத்தம் என்றால் பயப்படுவது ஏன்?**

! 'நம் இரண்டு பேரிடமும் அருமையான கத்தி இருக்கிறது என்பதற்காகவே நாம் சண்டை போடலாமா நண்பரே? யுத்தம் என்று வந்துவிட்டால் அழிவு இரண்டு பக்கமும்தான். அந்த பயம்தான் வல்லரசுகளைக் கட்டிப் போட்டிருக்கிறது.

* **எஸ். பி. சாரதி, சென்னை — 18.**

? **கல்கி அவர்கள் தொடர்கதை எழுதி வந்த போது தாரிணி என்னும் பாத்திரம் பற்றி உற்சாகத்தில் வரம்பு மீறி ஆபாச எல்லையைத் தொடும் வர்ணனையை எழுதி விட்டாலோ, ரசக்குறைவான சம்பவங்களைச் சொல்லிவிட்டாலோ அதைத் திருத்தும்படி தம்மிடம் 'கல்கி' யே கூறியதாக எஸ்.வி.எஸ். தெரிவித்த செய்தி ஒன்று குமுதத்தில் வெளியாகியிருக்கிறதே? கல்கி எப்போதாவது ஆபாசமாக எழுதக் கூடியவரா? தமது எழுத்தைத் திருத்துமாறு எஸ். வி. எஸ்.ஸிடமா சொல்லுவார்? கொஞ்சம் கூட நம்பும்படி இல்லையே ஸார்?**

! கல்கி மறைந்து முப்பது ஆண்டுகள் ஆகி விட்டன. அதற்கு ஆறு ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டது அலை ஓசை. முப்பத்தாறு ஆண்டுகளுக்கு முன் கல்கி என்ன சொன்னார்? வார்த்தைக்கு வார்த்தை எஸ். வி. எஸ். கூறியபடியேதான்பேசினாரா?என்றுஎஸ். வி. எஸ்.ஸின் ஞாபகசக்தியை நாம் சந்தேகிப்பது முறையாகாது. ஆனால் பொதுவாக ஒரு விஷயம் கூற முடியும். ஒரு பத்திரிகையில் உதவி ஆசிரியர்கள் அரசனுக்கு அமைச்சர்கள் மாதிரி. பத்திரிகையில் தவறுகள் வராமல் பார்த்துக் கொள்வதோடு நல்ல யோசனைகளை ஆசிரியருக்குக் கூற வேண்டும், பல பிரச்னைகளில்நிலவும்மாறுபாடானகருத்துக்களை ஆசிரியருடன் விவாதிக்க வேண்டும். இது அவர்கள் கடமை. இதை எதிர்பார்ப்பது ஆசிரியரின் உரிமை. ஆனால் எந்த ஒரு விஷயத்திலும் இறுதி முடிவு எடுப்பது ஆசிரியரே. இந்தத் தமது உரிமையைக் கல்கி என்றும் மறந்தவரல்ல. எனவே ரசக்குறைவான விஷயம் எது, ஆபாசத்தின் எல்லை எது என்று நிர்ணயிக்கிற இறுதி உரிமையும் கல்கியிடம்தான் இருந்தது; எஸ்.வி.எஸ் ஸிடம் அல்ல. கல்கி ஆபாசமாக எழுதுபவர் அல்ல என்பது அவரது நூல்களைப் படித்துள்ள யாவருக்கும் தெரியும்.

* **சி. இளங்கோ, செங்கவல்லி.**

? **'ராஜீவுக்கு ஜே போடுகிறேன், இந்திராவுக்கு அஞ்சலி செலுத்துகிறேன் ஓ. கே!' என்று தங்கள் நிருபர்கள் (வயதென்ன, 15, 16 இருக்குமா?) கல்பாக்கம் கட்டுரையை முடித்திருக்கிறார்கள். ஜவாஹர்லால் நேரு, பாபா, சாராபாய், சேத்னா இவர்கள் பெயர்களெல்லாம் அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லையே?**

! மிஸ்டர் இளங்கோ! உங்களுக்கு வயதென்ன 10, 12 இருக்குமா? இல்லையெனில் தாங்கள் குறிப்பிட்டுள்ள மேதைகளையெல்லாம் கல்கி போற்ற வேண்டிய தருணத்தில் போற்றத் தயங்கியதே இல்லை என்பது தெரிந்திருக்குமே? இன்று, இன்றைய சந்தர்ப்பத்தில் யாரை வாழ்த்த வேண்டுமோ, அவரை வாழ்த்தியதில் என்ன தவறு? அபிமன்யு கதையைச் சொல்வதென்றால் சந்தனு மகாராஜாவிடமிருந்து ஆரம்பிக்க முடியுமா ஸார்?

* **ரூ. 10 பரிசு பெறுபவர்:**
**வி. இளங்கோவன்,**
**44—A, டி. எஸ். கோபால் நகர்,**
**திருவொற்றியூர்,**
**சென்னை — 600 019.**

---



# Bhagavathy Sahayam
## Sree Annapoorneswari Pooja Co-ordinators

**(Sapco) Puthucode-678687**

**Palghat Dist (Kerala State)**

கேரளாவில் மிகப் பழமையான 18 பகவதி கோயில்களில் ஒன்றான புதுக்கோடு பகவதி கோயில் பாலக்காட்டில் 45 கி.மீ. அருகில் உள்ளது. இக்கோயில் 1100 வருஷங்களுக்கு மேலானது என்று பழைய குறிப்புகளிலிருந்து தெரிய வருகிறது. பகவதியின் கருணைக்கடல் எல்லையில்லாதது. தன்னை நாடி வரும் பக்தர்களின் துன்பமெல்லாம் தீர்த்து கல்வியும், தனமும், சந்தான பாக்கியமும் அள்ளி வழங்கும் அன்னையின் மகிமைகள் எண்ணற்றவை.

1929ம் வருடம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள் துர்க்கை அம்மன் கோயிலில் இரண்டு மாதங்கள் தங்கியிருந்து கிராமத்திற்கு ஞான அருளை அள்ளி வழங்கினர். நீண்ட காலமாக இக்கோயிலில் நில உடைமைகளிலிருந்து வரும் வருமானம் நின்று போய்விட்டதால் கோயிலின் நிலைமை மிகவும் மோசமான நிலையில் வந்துவிட்டதால், அன்னையின் பக்தர்கள் ஒன்று சேர்ந்து லக்ஷக்கணக்கில் பணத்தை செலவு செய்து சீர் திருத்தும் பணியை செய்து முடித்தார்கள்.

இக்கோயிலில் கும்பாபிஷேகம் 1986ல் ஜனவரி 20 முதல் 25 வரை நடத்துவதாக தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. நம் ஹிந்து மதம் பிரபலமடைய வேண்டி பல உபன்யாசங்கள், வைதீக காரியங்கள், பல இசை நிகழ்ச்சிகள், கேரளத்திற்கே உரிமையான கலாசாரங்கள் முதலியவை ஏற்பாடு செய்துள்ளார்கள். பக்தர்களுக்காக உணவு விடுதிகள், தங்கும் வசதிகள் முதலியவற்றிற்கு முன்பே தகவல் தெரிவித்தால் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்படும்.

இக்கும்பாபிஷேகத்திற்கு லக்ஷக்கணக்கான பணம் தேவைப்படுவதால் பக்த கோடிகள் அனைவரும் பணத்தை அன்னை பகவதிக்கு வாரி வழங்கி அன்னையின் அருளை பெறுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

“என் செல்லப்பேத்திக்கு என் பழங்கதைகளைக் கேட்பதில் அலாதி உற்சாகம்! எனக்கு 12 வயதிலேயே கல்யாண வைபோகம் நடந்த கதையைச் சொன்னால் அவளுக்கு கொள்ளமாட்டாத சிரிப்பு!

எனக்கு கல்யாணச் சீராகக் கிடைத்த எவர்சில்வர் பாத்திரங்களைப் பற்றியும் ஆவலாகக் கேட்பாள். நாற்பது வருடங்களாக இன்றும் நான் சமைத்துவரும் பாத்திரங்களாயிற்றே!

இப்போதெல்லாம் அந்த மாதிரியான ‘கிண்’ணென்ற பாத்திரங்கள் கிடைப்பதில்லை என்றே நினைத்திருந்தேன் — சேலம் எவர்சில்வர் பாத்திரங்களைப் பார்க்கும் வரை. எனக்கா தெரியாது, எது நல்ல பாத்திரம் என்று!

அந்த காலத்துப் பாத்திரங்களைப்போலவே உயர்தரமானவை. கரும்புள்ளிகளோ, கறையோ பிடிக்காது. வருடக்கணக்கில் உழைத்தாலும் பளபளப்பு போகாது.

நான் இனி பழங்கதை பேசினால் அதில் புது கதாபாத்திரங்களும் இருக்கும். அவைதான் சேலம் எவர்சில்வரில் செய்த பாத்திரங்கள்!”



சேலம் எவர்சில்வரினால் தயாரிக்கப்பட்ட பாத்திரங்கள் எல்லா பிரபலமான பாத்திரக்கடைகளிலும் கிடைக்கும்.

**சேலம் எவர்சில்வர்.**
**நம்பிக்கைக்குப் பாத்திரமான பாத்திரங்கள்.**



சேலம் உருக்காலை

Sista's.SSP.364-85 TM



வட்டமேஜை

* தாரசின் முள், உள்ளதை உள்ளபடி, எந்தவிதப் பாரபட்சமும் இன்றிக் காட்டும் என்பது உண்மைதானே! இதற்குப் போய் ஏன் இந்தளவு ஆரவாரம், வாராவாரம்!

பம்பாய்—71. செம்பூர் சந்துரு.

**மார்கழிச் சிலிர்ப்பு!**

* மார்கழி இளங்குளிரின் ஜில்லிப்பு மாதிரி, இசைவிழாச் சிறப்பிதழை அருமையாய் அளித்து எங்களைப் பரவசப்படுத்திவிட்டீர்கள்!

போடிநாயக்கனூர். கவி கண்ணன்.

**தனி முத்திரை!**

* கல்கியின் பேட்டியென்றாலே அந்தக் கேள்விகளுக்குத் தனி முத்திரை உண்டு. பாலசந்தரின் பேட்டியிலும் இது விதிவிலக்கல்ல.

கிருஷ்ணகிரி. இரா. மோகன்.

**ஏமாற்றம்!**

* சிவ குமார், ஜேசுதாஸ், இளையராஜா இவர்களைப் பற்றிக் கேட்ட உமது நிருபர் சிந்துவாக, சிறப்பாக நடித்த சுஹாசினியைப் பற்றிக் கேட்காமலிருந்தது ஏமாற்றம்! பேட்டியில் எங்கும் சுஹாசினியைப் பற்றிப் பாலசந்தர் குறிப்பிடாமலிருந்தது ஆச்சரியம்!

மதுரை—1. சி. எல். ரவிச்சந்திரன்.

**பரிசு நின்றதேன்?**

* 'வட்டமேஜை' பகுதியில் இடம் பெறும் ஒவ்வொரு கடிதமும் பரிசு பெறும் தகுதியுடையது என்ற எண்ணத்தில்தான் — ஒரு கடிதத்திற்கு மட்டும் பரிசளித்துக் கொண்டிருந்ததை நிறுத்தி விட்டீர்களா?

பெங்களூர்—53. 'லட்சுமிப்பிரியா.'

**நாங்களும் செய்கிறோம்!**

* 22.12.85 இதழ் கல்கியில் ஜாம்ஷெட்பூரிலுள்ள டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் தொழிற்சாலையில் எல்லாத் தொழிலாளர்களும் உடற்பயிற்சி செய்வதாகப் படித்தோம். எங்களது தொழிற்சாலையிலும், (போபெட், ரயில்வே பிராடக்ட் டிவிஷன்), இந்து சுசுகி மோட்டார் சைக்கிள் தொழிற்சாலையிலும், சுந்தரம் பாஸனர்ஸ் தொழிற்சாலையிலும், ஹரிதா ரப்பர் தொழிற்சாலையிலும் உள்ள எல்லாத் தொழிலாளர்களும் (முதல், இரண்டாவது, மூன்றாவது, பொது ஷிப்டில் உள்ளவர்கள்) தினமும் வேலை தொடங்குவதற்கு முன்பு 15 நிமிடங்கள் உடற்பயிற்சி செய்து வருகிறார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்னை—6. எஸ். சீதாராமன். இஞ்சினீரிங் சர்வீஸஸ்.

**நடந்தது இதுதான்!**

* 22.12.85 இதழில் செய்யாறு இடைத் தேர்தல் பற்றிய பதிலில் தாங்கள் குறிப்பிட்டுள்ள சம்பவம் நடந்தபோது நானும் இருந்ததால் நடந்தவற்றைக் கூறினால் தவறாகாது. எரையூர் கிராமத்தில் அமைச்சர் பேச எழுந்தவுடன் தங்கள் பத்திரிகையில் குறிப்பிட்ட தி. மு. க. வைச் சேர்ந்த வரதன் என்பவர் குடிவெறியில், "ஏய், என்னடா மந்திரி, பள்ளிக்கூடத்தை மூடிட்ட, சத்துணவு என்னடா போடுற...?" (சில வார்த்தைகளைச் சொல்ல அசிங்கமாக உள்ளது.) என்று அமைச்சரையும் எங்களையும் நரகல் நடையில் திட்டியபடி எங்களைத் தாக்கிடப் பாய்ந்து வந்தார். ஊர்ப் பொதுமக்கள் அவரைப் பிடித்துச் சமாதானப்படுத்திட முயன்றார்கள்; முடியவில்லை. விளைவு, ஊர்ப் பொது மக்களால் விரட்டி அடிக்கப்பட்டார். பின்னர் அமைச்சர் ஏறத்தாழ, பொதுமக்கள் மத்தியில் 30 நிமிடங்கள் பேசினார். அதன் பிறகு வீடு வீடாகச் சென்று வாக்குகள் சேகரித்தார். தேர்தல் நேரம் ஆதலால் அரசியலுக்காக இரண்டு தரப்பிலும் காவல் துறையிடம் புகார்கள் கொடுக்கப்பட்டன. பத்திரிகையில் கட்டுடன் படமும் வந்தது. உண்மைக்கு மாறாக. இதுதான் நடந்தது.

16.12.85 மாலை 5.30 மணி அளவில் அதே எரையூரில் தேர்தலில் எவ்வளவு வாக்குப் பதிவாகி உள்ளது என்று தெரிந்து வரச் சென்ற என்னைத் திரும்பும்போது ஏறத்தாழ 20 க்கு மேற்பட்ட தி. மு. க. வினர் சூழ்ந்து கொண்டு தாக்கிடவும் காருக்குத் தீ வைத்திடவும் முயன்றனர். அதையும் அவ்வூர்ப் பொதுமக்கள்தான் தடுத்து — என்னைப் பாதுகாத்து — அதிகமான வாக்குகளையும் அவ்வூரில் எங்கள் வேட்பாளருக்கு அளித்து அனுப்பி வைத்தனர்.

பட்டுக்கோட்டை. பி. என். இராமச்சந்திரன். (எம். எல். ஏ.)

61

# வாராவாரம் ஏனிந்த ஆரவாரம்?

அனைவருக்கும் எமது ஆங்கில புது வருட வாழ்த்துக்கள்.



**"கல்கி"**

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 78—00 |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 39—00 |

வெளிநாடு கப்பல் தபால் மூலம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 190/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 95/- |

**"மங்கையர் மலர்"**

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 36/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 18/- |

வெளிநாடு கப்பல் தபால் மூலம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 86/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 43/- |

**"கோகுலம்"**

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 24/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 12/- |

வெளிநாடு கப்பல் தபால் மூலம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 70/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 35/- |

சந்தா தொகையை M.O. அல்லது I.P.O. அல்லது டிமாண்டு டிராப்டு மூலம் அனுப்ப வேண்டுகிறோம்.

**மானேஜர் * கல்கி * சென்னை - 600032**



# ஹேமாவின் காதலர்கள்

அனுராதாவுக்குக் கூடக் கவிதை பேசும் கண்கள் இருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டிய விதத்தில், இது ஒரு புதுமையான படம்தான்!

இண்டர்வியூவிற்குப் போன இடத்தில் ஒவ்வொரு பதிலாய்ச் சொல்லச் சொல்ல (கேள்வி இன்றி, கேள்வியை ஊகிக்க வைக்கும் பதில்கள் மட்டும்) அனுராதாவின் முகத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் க்ளோசப்பில் காட்டுவது புதுமைதான். படத்தில் காணப்படும் முகங்கள் அனைத்துமே வாழ்க்கையில் நாம் சந்திக்கக் கூடிய பாத்திரங்களாகவே அமைத்திருப்பது ரசிக்கக் கூடிய ஒன்றுதான்.

ஆனால்...

ஒரு லோயர் மிடில் க்ளாஸ் பிராமணப் பெண் வேலைக்குப் போய், அங்கு ஒரு வேற்று ஜாதிக்காரனிடம் மனத்தைப் பறி கொடுத்து, ஒரு ராமராஜ்யம் போன்ற வாழ்க்கைக் கனவோடு அவனை மணந்து, அது பொய்யாகிப் போன பின், இடையில் சந்திக்கும் ஒரு தொழிற்சங்கவாதியின் கனவினால் பாதிக்கப்பட்டு (பசியற்ற குழந்தைகள் கொண்ட உலகம் – தொழிற்சங்கவாதியின் கனவு) அந்தக் கனவைத் தன்னால் நனவாக்க முடியாதா என்ற ஆசையுடன் கட்டிய கணவனை விட்டுக் கிராமத்தை நோக்கிப் போகிறாள். இதுதான் கதை.

பெரும்பான்மையான ஆண்கள் குடிகாரர்களாகவும், வேசிகள் வீட்டுக்குப் போகிறவர்களாகவும், மனைவியை அடக்குபவர்களாகவும், பொதுவாக இந்தச் சமுதாயத்தின் மீது நம்பிக்கை அற்றவர்களாகவும் சித்திரிக்கப்பட்டிருக்கிறார்கள்.

அனுராதாதான் ஹீரோயின். இவருடைய மற்ற படங்களையெல்லாம் பார்க்கும்போது இந்தப் படத்தில் இவர் இமயம் அளவு உயர்ந்திருக்கிறார். மற்றபடி நாயுடு காரெக்டர், சிங்கப்பூரார் காரெக்டர், தூங்குமூஞ்சி காரெக்டர் எல்லாம் அந்தரத்தில் 'அம்போ' என்று தொங்குகின்றன.

எங்காவது மிக லேசாகப் புன்முறுவல் பூக்க முடிகிறதென்றால் அது கவிஞர் குணாளனின் திருவுகோல் வசனத்தின் போதுதான்.

படத்தின் ஒரு ப்ளஸ் பாயிண்ட் இசை. இருக்கும் இரண்டு பாடல்களும் ரசித்துக் கேட்கும்படி இருக்கின்றன.

என்ன இருந்து என்ன?

படத்தில் எல்லோரும் இயல்புதான் என்றாலும் வெகு நிதானம். ஒரு வாக்கியத்திற்கும், இன்னொரு வாக்கியத்திற்கும் இடையில் சென்ட்ரல் ஸ்டேஷன் போய் தில்லி ரயிலுக்கு ரிசர்வ் செய்துவிட்டு வரலாம்.

—ஜெயமன்மதன்.

# கடைசி வரை குடிசையில் இருந்த எம்.எல்.ஏ!



**அண்மையில் படுகொலை செய்யப்பட்ட பாண்டிச்சேரி ஜனதா எம்.எல்.ஏ. உத்திரவேலு, மக்களின் பேரன்பையும், பெரும் செல்வாக்கையும் பெற்றிருந்தவர். அவரைப் பற்றி இவர்கள் சொல்கிறார்கள்...**

இரா. செழியன் (தமிழ்நாடு ஜனதா கட்சித் தலைவர்):

மூன்று முறை எம். எல். ஏ. வாகத் தேர்ந்தெடுக்கப்பட்டும் தனது குடிசை வீட்டைக் கூடச் சற்றும் மாற்றாமல் வைத்திருந்தவர் உத்திரவேலு. 'நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதை மக்கள் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். பதவியை முறைகேடாகப் பயன்படுத்திச் சொத்துச் சேர்த்தால் தேர்தலில் சரியான பாடம். கற்றுத் தருவார்கள்' என்று அடிக்கடி சொல்லுவார் அவர். 83ல் தி. மு. க. — இ. காங்கிரஸ் கூட்டு அமைச்சரவையில் இ. காங்கிரஸ் விலகிக் கொண்டபோது, தி. மு. க. வை ஜனதா ஆதரித்தது. அப்போது நான், 'வெளியிலிருந்தே ஆதரவு கொடுங்கள்' என்று சொன்னேன். அதற்கு அவர், 'எனக்கு மந்திரி பதவியின் மீது சிறிதும் ஆசை கிடையாது. அதை எதிர்பார்த்தும் நான் தி.மு.கவை ஆதரிக்கவில்லை' என்றார். அதிலிருந்து அவர் மீது நான் வைத்திருந்த மதிப்பு பல மடங்கு அதிகமாகிவிட்டது. பிறகு ஒருமுறை பாண்டிச்சேரி ஜனதா தலைவர் பொறுப்பை ஏற்றுக் கொள்ளச் சொன்ன போது கூட அவர், 'நான் எப்போதும் தொண்டனாகவே இருக்க விரும்புகிறேன்' என்று சொல்லி விட்டார். அவரின் இழப்பு எங்களுக்கு மட்டுமல்ல; பாண்டிச்சேரி மக்களுக்கும் பேரிழப்புத்தான்.

கலிவரதன் (தமிழக ஜனதா கட்சி செயலாளர்):

கடந்த பொதுத் தேர்தலின் போது தமிழக நடிகர் ஒருவர் உத்திரவேலுவை எதிர்த்துத் தெருத் தெருவாகப் பிரசாரம் செய்தார். அப்படியிருந்தும் அவரைத் தோற்கடிக்க முடியவில்லை. ரோடியர் மில் திறப்பு சம்பந்தமாக நடந்த ஒரு போராட்டத்தில் அவர் கைதான போது பாண்டி மக்கள் அனைவரும் கொதித்தெழுந்தது அவருடைய செல்வாக்குக்கு ஒரு சான்று. ஒரு வீட்டுக்கு உத்திரம் எவ்வளவு முக்கியமோ, அதுபோல் பாண்டிச்சேரி ஜனதாக் கட்சிக்கு உத்திரவேலு இருந்தார். இதற்குமேல் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

கண்ணன் (பாண்டிச்சேரி, தொழில் மற்றும் சுகாதார அமைச்சர்):

இனி பாண்டிச்சேரி சட்டசபையே சூடில்லாமல் இருக்கும். உத்திரவேலு இருந்தவரை அவ்வப்போது மக்களுடைய குறைகளைச் சுட்டிக் காட்டிக் கொண்டே இருப்பார். நாங்களும் அதன்படி குறைகளை நிவர்த்தி செய்ய வசதியாக இருந்தது. உண்மையிலேயே ஒரு மிகச் சிறந்த பார்லிமெண்டேரியனை இழந்து விட்டோம்.

பாரூக் மரைக்காயர் (பாண்டிச்சேரி முதல்வர்):

உத்திரவேலு உத்தமமான வேலு. பாண்டிச்சேரி அரசியல் வரலாற்றில் மறக்க முடியாத மனிதர் அவர்.

தொகுப்பு:
— நமது நிருபர்கள்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani    Editor: K. Rajendran

மங்கையின் எழிலின் நிறைவிற்கே
மனங்கவரும் பட்டுக்கு இணையுண்டோ!

பொங்கல் திருவிழா வரை
5% சிறப்புத் தள்ளுபடி



ங்கையின் மனதிற்கு மகிழ்ச்சியூட்டுவதில் பட்டுப் புடவைகளுக்கு ஈடேதுமில்லை.
க்ஷ்மி சில்க் ஹவுஸுற்கு விஜயம் செய்தாலன்றி உங்கள் பட்டுப் புடவைகளின்
ர்வு நிறைவு பெறுவதில்லை. வாருங்கள், 30,000க்கும் மேலான அரிய
டைப்புகளிலிருந்து தேர்ந்தெடுங்கள்.

**லக்ஷ்மி சில்க் ஹவுஸ்**
மாடியில்
பனகல் பார்க் எதிரில்,
தி. நகர், சென்னை 600 017.
உரிமையாளர்: லக்ஷ்மி சில்க் ஹவுஸ்

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Srilanka